# கொலம்பியா

புதிய வெளியீடு



## V.V. சடகோபன் B.A.,

பாடிய

GE·6340

ஆ நிரைமேய்க்க [பாசுரம்]

கண்ணன் முகம் [கமாஸ்]



## J.J. கல்யாணசுந்தர தேசிகர்

GE·6320

சேவிக்க வேண்டும்

(கல்யாணி) 2 பாகங்கள்



## ஸரஸ்வதி ஸ்டோர்ஸ், மதராஸ்.2

மேற்கண்ட ரிகார்டுகள் எங்களிடமும் கிடைக்கும்:

மெஸர்ஸ். குப்தா கார்ப்பொரேஷன்

தபால் பெட்டி நெ. 35, 17-A/428, அருணாசல ஆச்சாரி தெரு, சேலம்

1 — 4-5

# அருமையான பற்கள்!

## உங்கள் புன்னகையின் வசீகரத்தன்மை அபாயத்துக்குள்ளாகிறதா?




எல்லோரிடமிருந்தும் புகழைப்பெற உங்கள் குதூகல புன்னகை ஒருவித காந்த சக்தி. அதை ஈறு வியாதிகளால் பாழ்படுத்திக் கொள்ளாதீர்கள். தினந்தோறும் எஸ். ஆர். டூத்பேஸ்டினால் பற்களை சுத்தம் செய்தால் அவை உறுதியான ஈறுகளில் பளிச்சென்று வெண்மையாக, உங்கள் புன்முறுவலின் நிகரற்ற செல்வமாய் விளங்கும்.

● *பல் வைத்தியர்கள் ஈறு வியாதிகளுக்கு உபயோகப்படுத்தும் ஸோடியம் ரிஸிநோலியேட் சேர்ந்தது.

SRD-82-50 TM D. & W. GIBBS LIMITED, LONDON, ENGLAND

# கல்கி

## பொருளடக்கம்


மலர் 6 | இதழ் 40 — 1947 மே 4 — சர்வஜித்து சித்திரை 21




"கல்கி"யில் வெளியாகும் கதைகளில் உள்ள பெயர்களும், சம்பவங்களும் கற்பனை.

தென்னாப்பிரிக்கப் பிரதம மந்திரி பீல்ட் மார்ஷல் ஸ்மட்ஸ் வல்லான கண்டர் என்றும் வீராதி வீரர் என்றும் சூராதி சூரர் என்றும் புகழ்பெற்றவர். வாழ்க்கையிலே தோல்வியையே அறியாதவர். பிரிட்டனையே எதிர்த்து யுத்தம் நடத்தி ஜயித்தவர்.

அப்பேர்ப்பட்ட வீராதி வீரர் சென்ற 1946-ம் வருஷக் கடைசியில் முதல் முதலாக ஒரு பாரத நாட்டுப் பெண்மணியிடம் சகல தேசங்களுக்கும் மத்தியில் படுதோல்வி யடைய நேர்ந்தது. அந்த வீரப் பெண்மணியின் பெயர் ஸ்ரீமதி விஜயலக்ஷ்மி பண்டிட்.

இந்திய மக்களைத் தாழ்ந்தப்பட்டவர்களாக்கி அவர்களைச் சேரியில் வாழவைக்கும் ஆசியக் குடிவார மசோதாவைச் சட்டமாக்க வேண்டாமென்று இந்தியாவும் இந்திய மக்களும் எவ்வளவோ சொல்லிப் பார்த்தும் ஜெனரல் ஸ்மட்ஸ் அதைக் கேட்கவே இல்லை.

கடைசியில், இந்தியா இந்த விஷயத்தை ஐக்கியதேச மகாசபைக்குக் கொண்டு போயிற்று. அங்கே எவ்வளவோ சூழ்ச்சிகளுக்கு மத்தியில் இந்தியாவுக்கு வெற்றி கிடைத்தது.




ஸ்மட்ஸ் கொண்டு வந்த மேற்படி அநியாயச் சட்டத்தை எதிர்த்து இந்தியாவும் இந்திய மக்களும் போராடிக் கொண்டிருந்தபோது, தென்னாப்பிரிக்காவிலே வாழும் இந்திய மக்களும் சும்மா யிருக்கவில்லை. காந்தி மகான் ஏறக்குறைய முப்பது வருஷங்களுக்கு முன்னாலே அவர்களுக்குக் கற்றுக் கொடுத்த ஒப்பற்ற ஆயுதமாகிய சத்தியாக்கிரகப் போராட்டத்தை ஆரம்பித்தார்கள்.

மேற்படி சத்தியாகிரக இயக்கத்தை ஆரம்பித்து அதை வெற்றிகரமாக நடத்திவரும் பெருமை, நம்முடைய இந்த இதழ் அட்டைப் படத்தை அலங்கரிக்கும் டாக்டர் நாயக்கரையும் டாக்டர் டாடுவையுமே சேரும்.

தமிழராகிய டாக்டர் மோகாம்பரி நாயக்கரும் குஜராத் முஸ்லிமாகிய டாக்டர் யூஸப் டாடுவும் சமீபத்தில் டில்லியில் நடந்த அகில ஆசிய மகாநாட்டில் கலந்து கொள்வதற்காக இந்தியாவுக்கு வந்தார்கள். மேற்படி மகாநாடு முடிந்த பிறகு, சமீபத்தில் சென்னைக்கு வந்து சென்னையிலுள்ள பல பிரமுகர்களைப் பார்த்துப் பேசினார்கள். மீண்டும் தென்னாப்பிரிக்காவுக்குப் பயணமாகிறார்கள்.

இவர்கள் இருவரையும் இந்தியாவுக்கு வரவிடாமல் செய்வதற்காக ஸ்மட்ஸ் சர்க்கார் எவ்வளவோ முயற்சி செய்து பார்த்தார்கள். ஆனால் பலிக்கவில்லை.

டாக்டர் நாயக்கர் நமக்கு அனுப்பியிருக்கும் தம்முடைய புகைப் படத்திலே, "நண்பன் வேறு தேசத்துக்குப் போனால் என்ன? தம்முடைய இதயத்திலிருக்கும் அன்பை, தூரம் மாற்றவா போகிறது?" என்று கவிதா ரசம் ததும்ப எழுதி யிருக்கிறார்.

நாமும் அதை ஆமோதிக்கிறோம். இந்த வீர இந்தியப் புதல்வர்கள் எவ்வளவு தூரத்துக்கு அப்பால் இருந்தால் என்ன? இந்தியா என்றும் அவர்களை மறக்கவே மறக்காது.




மலர் 6 | தமிழ்த் திருநாடு தன்னைப் பெற்ற தாயென்று கும்பிடடி பாப்பா —பாரதியார் | இதழ் 40

# என்ன சேதி?

## விடுதலை

சென்ற வாரத்தில் தமிழ் மக்களுக்குக் கிடைத்த மிகவும் மகிழ்ச்சி தரும் செய்தி ஸ்ரீ எம். கே. தியாகராஜபாகவதரும், ஸ்ரீ என். எஸ். கிருஷ்ணனும் விடுதலை அடைந்ததாகும். தமது இனிய சாரீரத்தினாலும் சங்கீதத்தினாலும் பல்லாயிரம் தமிழ் மக்களின் உள்ளங்களை வெள்ளித்திரை மூலம் கொள்ளை கொண்டவர் ஸ்ரீ எம். கே. தியாகராஜ பாகவதர். ஸ்ரீ என். எஸ். கிருஷ்ணனோ தமது ஒப்பற்ற நகைச் சுவை நடிப்பினால் எத்தனையோ லட்சம் தமிழ் மக்களுக்குக் குதூகலத்தை அளித்து எல்லையில்லாத உற்சாகம் வாழ்க்கையில் பொங்கும்படி செய்தவர். இவ்விருவரும் நமது நாட்டில் வழங்கும் சட்ட முறையின் விசித்திரக் கோளாறு காரணமாகச் சுமார் இருபத்தெட்டு மாதம் சிறையில் கழிக்கும்படி நேர்ந்தது. இவர்களுடைய தண்டனை நியாயமற்றது என்று பொது மக்களில் எத்தனையோ பேர் கருதி வந்தார்கள். அதைச் சட்டமும் கோர்ட்டும் ஒப்புக்கொள்வதற்கு இத்தனை காலம் ஆயிற்று. இத்தகைய பெரும் நியாயத் தவறுக்கு விதிவசத்தின்மேலே பழியைப் போடுவோரும் உண்டு. எப்படியானாலும், இத்தனை காலம் கழித்தாவது நியாயம் பிறந்து ஸ்ரீ பாகவதரும் ஸ்ரீ கிருஷ்ணனும் விடுதலையானது தமிழர்களுக்கு மிக்க மகிழ்ச்சி தரும் காரியம். இவர்களுடைய விடுதலையின் மூலம் தமிழ்ப் பட உலகில் ஒரு புது அத்தியாயம் ஆரம்பமாகும் என்றும் தமிழ்ப் படங்கள் மேன்மையும் தூய்மையும் அடையும் என்றும் எதிர்பார்க்கிறோம்.

## சிநேகம் வேண்டுமாம்!

பிரிட்டிஷ்காரர்களுக்கு நெஞ்சு 'பக்' 'பக்' கென்று அடித்துக் கொள்கிறது. "இந்தியாவிலே எத்தனையோ ஜாலியன் வாலாபாக் நடத்தினோமே; இந்திய மக்களுக்கும் இந்திய தேசபக்தர்களுக்கும் எத்தனை எத்தனையோ கொடுமைகள் எல்லாம் செய்தோமே; சுதந்தரம் பெற்ற பிறகு அவர்கள் அதையெல்லாம் மறப்பார்களா? நம்முடன் சிநேகமா யிருப்பார்களா?" என்றெல்லாம் அவர்கள் இப்போது கவலைப் பட ஆரம்பித்திருக்கிறார்கள்.

சுதந்திர இந்தியா உலகத்திலே முக்கிய ஸ்தானத்தை வகிக்கும் என்பது பிரிட்டிஷ்காரர்களுக்கு நன்றாகத் தெரியும். அப்போது, இந்தியாவின் உதவி தங்களுக்கு ரொம்ப ரொம்ப அவசியமாயிருக்கும் என்பதும் அவர்களுக்குத் தெரியும். ஆகவே, இந்திய சுதந்திரத்தின் பரம விரோதிகளாயிருந்த பிரிட்டிஷார்கூட இப்போது இந்தியாவின் நட்பைப் பெறுவதில் முனைந்திருக்கிறார்கள்.

சென்ற வாரம் லண்டனில் உள்ள இந்திய நண்பர்கள் கமிட்டி ஆரம்ப விழாவின்போது, மாஜி உதவி இந்தியா மந்திரியான ஸ்ரீ பட்லர் பேசுகையில், இந்தியாவுக்கும் பிரிட்டனுக்கு மிடையில் 'நெருங்கிய நட்பு' இருக்க வேண்டியது அவசியமென்றும் அதற்காக எல்லோரும் பாடுபட வேண்டும் என்றும் சொல்லியிருக்கிறார்.

இந்தியாவுக்கும் பிரிட்டனுக்கு மிடையே இப்போது சிநேகபாவமான உறவே இருந்து வருகிறது. பிரிட்டனில் தொழிற் கட்சி சர்க்கார் பதவிக்கு வந்ததிலிருந்தே இந்தோ-பிரிட்டிஷ் உறவிலே பெரும் மாறுதல் ஏற்பட்டிருக்கிறது என்பதில் யாருக்கும் சந்தேகம் இருக்க முடியாது. ஆனால், மேற்படி சிநேகமும் நல்லுறவும் மேலே மேலே வளராமல் அதற்கு இடையூறு செய்து வருபவர்கள் மேற்படி பட்லர் துரையின் கட்சிக்காரர்களே யாவார்கள். இந்திய சுதந்திரமடையப் போகும் இந்தக் கடைசி சமயத்திலுங்கூட பிரிட்டிஷ் கன்ஸர்வேடிவ்

கட்சிக்காரர்கள்—முக்கியமாக சர்ச்சில்— இந்திய சுதந்திரத்துக்கு முட்டுக்கட்டை போடும் வேலையை நிறுத்தவில்லை; இந்தியாவையும் இந்திய மக்களின் நன்மதிப்புக்குரிய தலைவர்களையும் தாக்குவதையும் நிறுத்தவில்லை. இந்தியாவின் நட்பு உண்மையாகவே பிரிட்டனுக்கு வேண்டுமென்று மிஸ்டர் பட்லர் கருதும் பட்சத்தில், அவரும் அவருடைய கட்சியாரும் முதலில் தங்களுடைய மனோபாவத்தை மாற்றிக்கொண்டே யாகவேண்டும்.

## முடிவு செய்தார்கள்!

மாஸ்கோவிலே நடந்த ருஷிய - அமெரிக்க - பிரிட்டிஷ் - பிரஞ்சு அயல்நாட்டு மந்திரிகள் மகாநாடு ஒரு வகையாக முடிந்திருக்கிறது.

மேற்படி மகாநாடு ஏழு வாரங்கள்—அதாவது ஏறக்குறைய இரண்டு மாதங்கள்—இன்னும் தெளிவாகச் சொல்லப் போனால், ஒரு வருஷத்திலே ஆறில் ஒரு பகுதி காலம் நடந்தது. எழுபத்துமூன்று தடவை மேற்படி அயல்நாட்டு மந்திரிகள் கூடி விவாதித்தார்கள். நான்கு முறை இரகசியமாகவும் கூடி விவாதித்தார்களாம். இவ்வளவெல்லாம் சிரமப்பட்டு இரவு பகல் என்று பாராமல் கஷ்டப்பட்ட பிறகு, உலகமெல்லாம் பிரமிக்கும்படியாக அவர்கள் ஏகமனதாக ஒரு முடிவுக்கு வந்து அதை வெளியிட்டிருக்கிறார்கள்.

மேற்படி முடிவு என்னவெனில், அயல் நாட்டு மந்திரிகள் நவம்பர் மாதம் லண்டனில் மீண்டும் மகாநாடு கூடவேண்டும் என்பதே யாகும்!

மேற்படி மகாநாடு கூடுவதற்கு முன்பும் கூடிய பிறகும், பெரிய பெரிய விஷயங்களைப் பற்றியெல்லாம் முடிவு செய்யப் போவதாக அந்த அயல்நாட்டு மந்திரிகள் தம்பட்டம் அடித்தார்கள். வெகு நாட்களாக வாத விவாதத்தி 'லிருக்கும் ஜெர்மன் உடன்படிக்கையைப் பற்றியும் ஆஸ்திரிய உடன்படிக்கையைப் பற்றியும் முடிவு செய்து விட்டது போலப் பாவனை செய்தார்கள். கடைசியில், ஒரு முடிவும் ஏற்படவில்லையென்ற முடிவோடு மகாநாடு கலைந்தது.

## என்னத்துக்கு ஏமாற்றம்?

மேற்படி மகாநாடு இப்படி ஒரு விஷயத்தைப் பற்றியும் முடிவு செய்யாமல் கலைந்ததற்காக உலகம் ஏமாற்ற மடையக் கூடாதென்று மேற்படி அயல் நாட்டு மந்திரிகளில் ஒருவராகிய பிரிட்டிஷ் மந்திரி ஸ்ரீ பெவின் சொல்லுகிறார்.

ஏமாற்றமா? என்னத்துக்கு ஏமாற்றம்? ஏதாவது இந்த மகாநாட்டில் முடிவு ஏற்படுமென்று யாருக்காவது நம்பிக்கை இருந்திருந்தாலல்லவா இப்போது ஏமாற்ற மடையவேண்டும்?

இது விஷயமாக ஓர் அமெரிக்கப் பத்திரிகை வெகு ரஸமாகப் பின்வருமாறு சொல்லியிருக்கிறது:—"இன்னொரு உலக மகா யுத்தம் கண்டிப்பாக வரக்கூடாது; வரவே கூடாது! ஏனென்றால், மற்றொரு சமாதான மகாநாட்டை — அயல் நாட்டு மந்திரிகள் மகாநாட்டை — இந்த உலகத்தினால் தாங்கவே முடியாது!''

அதாவது, மகா யுத்தத்தினால் உலகத்துக்கு நேரும் சங்கடங்களை விடச் சமாதான மகாநாடுகளினால் அதிக சங்கடங்கள் உண்டாகின்றன என்பதை மேற்படி பத்திரிகை அப்படிப் பரிகாசமாக எடுத்துச் சொல்லியிருக்கிறது. ரொம்ப சரி!

## நாக்கு நீளுகிறது!

ஆந்திர சகோதரர் சிலரின் நாக்கு வரவர ரொம்ப நீளுகிறது. அவர்கள் ஆந்திர மாகாணத்துக்குத் தெற்கு எல்லையாகச் சென்னை நகரத்தைக் கேட்பதுடன் மாத்திரம் நிற்கவில்லை. இப்போது செங்கற்பட்டு ஜில்லா வரைக்கும் உரிமை கொண்டாடுகிறார்கள். ஆந்திர மகாசபைக் காரியதரிசி வெளியிட்டிருக்கும் ஓர் அறிக்கையில், செங்கல்பட்டு ஜில்லாவையும் ஆந்திர மாகாணத்துடன் சேர்க்க வேண்டுமென்று சொல்லுகிறார்.

இதற்கு வேறு காரணம் எதுவும் இருந்தாலும் இல்லாவிட்டாலும் ஒரே ஒரு காரணம் இருப்பது மாத்திரம் நமக்கு வெகு நன்றாகத் தெரிகிறது.

ஆந்திரர்களும் கன்னடியர்களும் மலையாளிகளும் தங்கள் தங்கள் சொந்த மாகாணத்தை ஏற்படுத்துவதற்காக முரசு கொட்டிக் கொண்டிருக்கும் போது, தமிழர்கள் மாத்திரம் கும்பகர்ணத் தூக்கத்தில் ஆழ்ந்திருந்தால், ஆந்திரர்கள் செங்கல்பட்டை மாத்திரந்தானா கேட்பார்கள்; மதுரை வரையிலுள்ள தமிழ்நாட்டுப் பகுதியைக் கூடக் கேட்பார்கள்!

இதைப் பற்றி இந்த இதழ் வட்ட மேஜையில் வெளியாகி யிருக்கும் கடிதம் நிலைமையை நன்றாக எடுத்துக் கூறுகிறது.

# நிகழ்ச்சிச் சித்திரம்

நண்பர்களே, அஞ்சவேண்டாம்!
இன்னும் கொஞ்சம்
நம்பிக்கை இருக்கிறது

"அரசியல் நிர்ணய சபையில்
சேராத மன்னர்கள்,
பிளந்து வெடித்துப் போன
கூரையின் கீழ் உட்கார்ந்-
திருக்கிறார்கள் என்று நான்
எச்சரிக்கிறேன்" — கிருபளானி

ஆனால், அரசியல்
நிர்ணய சபையில்
சேர்ந்த மன்னர்களோ,
பலமான கூரைக்குக்
கீழ் இருக்கிறார்கள்

அரசியல்
நிர்ணய
சபை

ஸமஸ்தான மக்கள்

உதயப்பூர்

-சாஸ்திரி


மூன்று பேர்
உள்ளே போனார்கள்...
பெவின் (பிரிட்டன்)
பிடால்ட் (பிரான்ஸ்)
மாஸ்கோ
சர்க்கார் மாளிகை


ஆனால், திரும்பி வந்தபோது, நான்கு
பேர் வெளியே வந்தார்கள்!!
என் வேலையை எங்கே ஆரம்பிப்பது என்பதை முடிவு செய்வதற்கு இன்னும் கொஞ்ச காலமாகும்
மாஸ்கோ
சர்க்கார் மாளிகை

# முட்டுக்கட்டை நொறுங்கியது

"பதவி என்றாலே என் தலை சுற்றுகிறது" என்று மகாத்மா காந்தி சொல்லி வந்த காலம் உண்டு.

அன்றிருந்த நிலைமை அப்படி.

அப்போது போர்ப் படலம் முடிவுறவில்லை. அந் நிலைமையில் பதவி மோகத்துக்கு இடம் கொடுப்பது பேராபத்தாக முடியும் என்றே காந்திஜி அவ்வாறு கூறி வந்தார்.

பின்னர் சுதந்திரப் போர் ஒரு குறிப்பிட்ட கட்டத்தை யடைந்ததும், பதவியேற்புத் திட்டத்துக்கு ஆசிர்வாதம் அளிக்கக் காந்திஜி ஒரு க்ஷணமும் தயங்கவில்லை.

அதாவது, சுதந்திரப் போருக்குப் பதவியேற்பு முட்டுக்கட்டையாக இருந்த வரையில் அதை நமது தலைவர்கள் ஏறெடுத்தும் பார்க்கவில்லை.

ஆனால், சுதந்திரப் போரில் அதையும் ஓர் அம்சமாக ஏற்றுக்கொள்ள வேண்டிய சமயம் வந்தபோது தயக்கமின்றி அவ்விதமே செய்யுமாறு தலைவர்கள் கட்டளை பிறப்பித்தனர்.

ஒரு மகத்தான இலட்சியத்தை அடைவதற்குரிய முறைகளை அடியோடு மாற்றிக் கொள்ளுவதில் தவறு எதுவுமில்லை.

அவ்வாறு மாற்றிக் கொள்ள வேண்டிய சந்தர்ப்பமும் நிர்ப்பந்தமும் ஏற்படும்போது மாற்றிக் கொண்டுதான் தீரவேண்டும்.

* * *

பாக்கிஸ்தான் இயக்கத்தையும் தேசத்தைப் பிளப்பதையும் நம் காங்கிரஸ் தலைவர்கள் ஒரு காலத்தில் அடியோடு எதிர்த்து வந்தார்கள்.

ஆனால், இன்றோ நிலைமை முற்றிலும் மாறி யிருக்கிறது.

சென்ற திங்கட்கிழமை மீண்டும் ஆரம்பமான அரசியல் நிர்ணய மகா சபையில் அதன் தலைவர் பாபு ராஜேந்திரர் குறிப்பிட்டிருப்பதிலிருந்து, ஒருவாறு பாக்கிஸ்தான் ஏற்படுவதைக் கூட நம் தலைவர்கள் சகித்துக் கொள்ளத் தயாராகி விட்டார்கள் என்று தெரிகிறது. ஆனால் அதே சமயத்தில் பஞ்சாபிலும் வங்காளத்திலும் முஸ்லிம் அல்லாதார் அதிகமாயுள்ள பிரதேசங்களைத் தனியே பிரிப்பதை வற்புறுத்துவார்கள் என்றும் அறிகிறோம்.

சிறுபான்மையோரான முஸ்லிம்களின் க்ஷேமத்துக்காக இந்தியாவைப் பிரிப்பது நியாயமாயின், சிறுபான்மையோரான இதர சமூகங்களின் க்ஷேமத்துக்காக மாகாணங்களைப் பிரிப்பதும் நியாயம் என்றாகிறது அல்லவா?

இவ்விஷயத்தையும் பாபு ராஜேந்திரர் வற்புறுத்திக் கூறியிருப்பதிலிருந்து, இந்தியா பிரிக்கப்படுவதாயின் பாஞ்சாலம், வங்காளம் போன்ற மாகாணங்களும் பிரிக்கப்படுவது நிச்சயம் என்பது தெரிகிறது.

பிள்ளையார் பிடிக்கப் போய்க் குரங்காக முடிந்தது என்று சொல்லுவார்கள் பாக்கிஸ்தானமும் இன்று அதே கதிக்குத்தான் வந்திருக்கிறது!

* * *

சென்ற கால் நூற்றாண்டுக்கு மேலாகக் காங்கிரஸ் செய்த தியாகத்துக்கு உலக சரித்திரத்திலே உவமையில்லை.

பகைவருடைய இரத்தத்தைச் சிந்தாமல் பகைவரை வென்ற நம் காங்கிரஸ் தலைவர்களின் பெருமையைக் கண்டு உலக நாடுகளே பிரமித்துப் போயிருக்கின்றன.

மகா கோரமான யுத்தத்தில் ஜயம் பெற்ற ருஷியா போன்ற வல்லரசுகள் கூட வெற்றி பெற முடியாத ஐக்கிய நாடுகள் சபையில் இந்தியா வெற்றி முரசு கொட்டி யிருக்கிறது.

சுதந்திர இந்தியாவின் அடிச்சுவடுகளைப் பின்பற்றுவதே தங்களுடைய எதிர்கால க்ஷேமத்துக்கு இன்றியமை

யாத வழி என்ற முடிவுக்கு ஆகிய நாடுகள் வந்திருக்கின்றன.

இத்தகைய மகத்தான கௌரவத்துக்கெல்லாம் காரணம், இந்திய தேசிய மகாசபைதான் என்பதை நியாயபுத்தி படைத்த சகலரும் ஒப்புக்கொள்ளுவர் என்பதில் அணுவளவும் சந்தேகமில்லை.

அந்த மகாசபையின் மகிமை, தியாகம், தைரியம் இவற்றின் காரணமாக இன்று இந்தியாவில் சுதந்திரோதயமாகி இருக்கிறது.

ஆனால், தியாகிகள் உருவாக்கிய கண்ணினுமினிய சுதந்திரத்தை உருக்குலைப்பதற்காகத் துரோகிகளின் கூட்டமும் வெகு மும்முரமாக வேலை செய்து வருகிறது.

தங்களுக்கென்று 'தனிச் சுதந்திரம்' கோரும் கூட்டம், நிரபராதிகளைக் கொன்று குவித்தும், வீடுகளுக்குத் தீ வைத்தும், மற்றும் விவரிக்க முடியாத அக்கிரமங்களைச் செய்தும் தன் 'வீர'த்தனத்தைக் காட்டி வருகின்றது.

அரசியல் ஏஜண்டுகளின் ஆதிக்கத்திலிருந்தும் பிரிட்டிஷ் ஏகாதிபத்தியத்தின் இரும்புப் பிடியிலிருந்தும் காப்பாற்றியதற்காகக் காங்கிரஸுக்கு நன்றி செலுத்த வேண்டிய சமஸ்தானங்கள், 'இனி எங்கள் இஷ்டப்படி எக்காளம் போடுவோம்' என்று கூத்தடிக்கின்றன.

காங்கிரஸ் மகாசபை தியாகம் செய்திராவிடின், இன்னும் எத்தனை வருஷங்களாயினும் அரசியல் ஏஜண்டுகளுக்குத் தாங்கள் சலாம் போட்டு வருவதைத் தவிர வேறு வழி எதுவும் இராதென்பதைச் சில சமஸ்தானங்கள் இன்னும் உணர்ந்து கொள்ளாதது தான் ஆச்சரியமாக இருக்கிறது.

• • •

இந்தியாவின் முன்னேற்றத்துக்கு மன்னர்கள் மண்டலம் ஒரு பெரும் முட்டுக்கட்டையாக இருந்து வருகிறதென்று சென்ற பிப்ரவரி மாதம் 2-ந் தேதி இதழில் நாம் குறிப்பிட்டிருந்தது வாசக நேயர்களுக்கு ஞாபகமிருக்கலாம்.

ஆனால், அந்த முட்டுக் கட்டை இப்போது நொறுங்கி விட்டதைக் குறித்து மிகவும் மகிழ்ச்சி அடைகிறோம்.

அது நொறுங்கியதற்குக் காரணஸ்தர்களான கொச்சி மகாராஜா, பரோடா மகாராஜா, பிகானீர் மகாராஜா முதலிய மற்றும் பல மகாராஜாக்களையும் தேச மக்கள் வாழ்த்தக் கடமைப்பட்டிருக்கிறார்கள்.

அதன் பலனாக, அரசியல் நிர்ணய மகா சபையில் இப்போது சில சமஸ்தானங்களின் பிரதிநிதிகளும் பிரசன்னமாகி யிருக்கிறார்கள்.

முதன் முறையாக எட்டு சமஸ்தானங்களின் பிரதிநிதிகளே சபைக்கு வந்திருக்கிறார்கள். எனினும், அவர்கள் இரண்டு கோடி சமஸ்தானப் பிரஜைகளின் பிரதிநிதிகள் என்பதை நாம் மறந்துவிடக் கூடாது.

மொத்தமுள்ள சமஸ்தானங்களின் தொகை சற்றேறக் குறைய 9½ கோடியாகும்.

மேற்படி சபையில் கலந்து கொள்ளுவதாக 1½ கோடி ஜனத் தொகையுள்ள மற்றும் சில சமஸ்தானங்களும் பகிரங்கமாக வாக்குறுதி அளித்திருக்கின்றன.

எனவே, இந்தியாவிலுள்ள சமஸ்தானங்களின் மொத்த ஜனத் தொகையில் பாதிக்கு மேற்பட்டவர்களின் பிரதிநிதிகள், கூடிய சீக்கிரம் அரசியல் நிர்ணய மகாசபையை அலங்கரிக்கப் போகிறார்கள் என்று எதிர்பார்க்கலாம்.

விவேக புத்தி படைத்த அவர்களின் அடிச் சுவடுகளை மீதியுள்ள சமஸ்தான அதிபர்களும் பின்பற்ற அதிகக் காலதாமத மாகாது.

இச் சந்தர்ப்பத்தில், கொச்சி மகாராஜா தமது சகோதர மன்னர்களுக்கு விடுத்துள்ள வேண்டுகோள், அவர்களின் மனதில் கொஞ்ச நஞ்சமுள்ள சந்தேக புத்தியையும் அகற்றி நல் வழி காட்டும் என்று நம்புகிறோம்.

“இந்தியாவின் அரசியல் மலர்ச்சிக்குச் சமஸ்தானங்கள் பிரமாதமாக உதவி புரியக் கூடும் என்று கூறப்படுகிறது. இக் கூற்றில் அணுவளவாவது உண்மை இருக்கிறதா?

“பிரிட்டிஷ் ஆதிபத்தியத்தின் இஷ்டத்துக்கு விரோதமாக இந்திய மன்னர்கள் தங்கள் விரலையும் அசைக்க முடியாது. பிரிட்டிஷ் ஆதிபத்தியமும் அதன் பிரதிநிதியான அரசியல் இலாகாவும்தான் மன்னர்கள்மீது சர்வாதிகாரம் செலுத்தி வந்திருக்கின்றன. பிரிட்டிஷ் ஆதிபத்தியம், அரசியல் இலாகா இவை சம்பந்தப்பட்ட வரையில் மன்னர்கள் அடிமைகள்; ஆனால்,

தங்களுடைய சொந்தப் பிரஜைகள் சம்பந்தப்பட்ட வரையில் எதேச்சாதிகாரிகள்.

"இவ்வாறாக, அடிமைத்தனத்திலும் எதேச்சாதிகாரத்திலும் உழன்று வந்துள்ள மன்னர்கள் இந்தியாவின் சந்ததிகளுக்கு உதவக் கூடியது என்ன இருக்கிறது?

"எனவே, இந்தியாவின் எதிர்கால முன்னேற்றத்துக்கு நாம் பிரயோஜனகரமான முறையில் ஏதாவது செய்வதாயின், அதற்கு ஒரே ஒரு வழிதான் உண்டு. அதாவது எதேச்சாதிகாரத்தையெல்லாம் அடியோடு ஒழித்து விட்டு ஜனநாயக முறைக்கு உட்பட்ட மன்னர்களாகத் திகழ்வதேயாகும்.

"நமக்குக் காலக் கைகாட்டி குறிப்பிடும் வழி அதுதான். ஞான மார்க்கமும் அதுதான்.

"முன்னர் நாம் ஒற்றுமையின்றிச் சிதறியதால்தான் அடிமைகளானோம். மீண்டும் நாம் அதே தவறைச் செய்துவிடக் கூடாது. மகத்தான பலம் பொருந்திய ஐக்கிய இந்தியாவில் நாம் ஓர் அம்சமாகத் திகழ வேண்டுமேயன்றி, இந்தியன் என்று கூறிக் கொள்ளும் உரிமையை நாம் இழந்துவிடக் கூடாது."

அரசியல் ஞானமும், களங்கமற்ற தேசபக்தியும், கண்ணியமும் செறிந்து விளங்கும் கொச்சி மகாராஜாவின் மேற்படி ஹிதோபதேசம், மன்னர்கள் தங்களுடைய மடமையை உதறித் தள்ளிவிட்டுக் கடமையைக் கைக்கொள்ளுமாறு செய்யுமென்று எதிர்பார்க்கிறோம்.

பரோடா திவான் சர் பி. எல். மித்தர் முதலிய சமஸ்தானப் பிரதிநிதிகளும் அதே தொனியில் பேசியிருப்பதைக் கண்டு தேச பக்தர்கள் புளகாங்கிதம் அடைவர் என்பதில் ஐயமில்லை.

* * *

நாங்கள் பிரசன்னமாகா விட்டால் அரசியல் நிர்ணய மகா சபையே ஸ்தம்பித்து விடுமென்றும், பிறகு அதை ரத்துச் செய்யும்படியான நிலைமைகூட ஏற்பட்டு விடுமென்றும் சில பிரமுகர்கள் கனவு கண்டு வந்தனர்.

ஆனால், அவர்களுடைய கனவில் மண் விழுந்து விட்டது.

பலவித முட்டுக் கட்டைகளையும் நொறுக்கிக் கொண்டு அரசியல் நிர்ணய மகாசபை வெகு ஜோராகவும் துரிதமாகவும் நடைபெற்று வருகிறது.

அடுத்த அக்டோபர் மாதம் 31-ந் தேதிக்குள் பாரத கண்டத்தின் அரசியல் திட்டம் தயாராகி விடும் என்றும் எதிர்பார்க்கப்படுகிறது.

பல்வேறு கமிட்டிகளும் தங்களுடைய அறிக்கைகளை மேற்படி மகாசபையில் சமர்ப்பித்திருக்கின்றன.

சர்தார் பட்டேல் சமர்ப்பித்துள்ள பிரஜா உரிமைகளடங்கிய அறிக்கை உலகிலேயே சிறந்த குடியரசு சாஸனமாக விளங்கும் என்பது நிச்சயம்.

பாக்கிஸ்தானத்தின் உருவமே இன்னும் நிர்ணயமாகாமல் இருக்கும் போது, அரசியல் நிர்ணய மகாசபை அமோகமாக நடந்து வருவதைக் கண்டு லீக்கர்கள் பீதியடைந்து பதறி வருகிறார்கள்.

எனவே, இடைக்கால சர்க்காரில் ஜின்னா சாயபு தமது 'மெய்க் காவலர்' களைக் கொண்டு வந்து சேர்த்தது போல், அரசியல் நிர்ணய மகாசபையிலும் சில பேர்வழிகளைக் கொண்டு வந்து சேர்த்து விட்டால் அச்சபைக்குள்ளும் முட்டுக் கட்டைக் கைங்கரியம் நடைபெற்று வரும் என்பதற்காக ஒரு விசித்திரமான சூழ்ச்சித் திட்டம் தயாராகி வருவதாக டில்லிச் செய்தி ஒன்று கூறுகிறது.

* * *

காங்கிரஸின் மிரட்டலுக்குப் பணிந்து சில சமஸ்தானங்கள் அரசியல் நிர்ணய மகா சபையில் கலந்து கொள்ளத் தீர்மானித்திருக்கின்றன என்ற லியாகத் அலிகானின் கூற்றை ஏற்கெனவே பிகானீர் மகாராஜா மறுத்து விட்டார்.

அக்கூற்று கலப்பற்ற புளுகு என்பதை அரசியல் நிர்ணய மகாசபையிலும் சமஸ்தானப் பிரதிநிதிகள் அம்பலப்படுத்தி யிருக்கிறார்கள்.

மிரட்டல், பலாத்காரம் இவற்றைத் தவிர வேறெந்த யோக்கியதாம்சமும் இராத ஒரு ஸ்தாபனத்தைச் சேர்ந்தவர்கள், புதிய முட்டுக்கட்டைகளைச் சிருஷ்டிக்க முற்படுவதையும் புளுகுப் பிரசாரத்தில் ஈடுபடுவதையும் கண்டு ஆச்சரியப் படுவதற்கில்லை.

ஆனால் யார் என்ன முட்டுக்கட்டை போட்டாலும், துஷ்பிரசாரம் செய்தாலும் அதையெல்லாம் தகர்த்துக் கொண்டு முன்னேறும் சக்தி நம் ஒப்பற்ற தேசியத் தலைவர்களுக்கு உண்டு என்பதில் சிறிதும் ஐயம் இல்லை.

# அபலையின் கண்ணீர்

கல்கி

## மூன்றாம் பாகம்

மாஸிக் கோனர் வீதியிலிருந்த இருளடைத்த வீட்டில் இன்ஸ்பெக்டர் தனராஜ் பார்த்த பயங்கர சம்பவம் நடந்ததற்குப் பல தொடர் நிகழ்ச்சிகள் காரணமாயமைந்தன. மேலே கதையைத் தொடர்வதற்கு முன்னால் அந்நிகழ்ச்சிகளை நாம் தெரிந்து கொள்ள வேண்டும்.

இன்ஸ்பெக்டர் தனராஜின் கூரிய கழுகுக் கண்கள் அன்று மத்தியானம் சிவராஜின் கையிலிருந்த கடிதத்தைக் கவனித்தனவல்லவா? அந்தக் கடிதத்தை, சிவராஜ் ஹோட்டலில் சாப்பிட்டு வீட்டுத் திரும்பிவந்து கொண்டிருந்தபோது சந்தின் முனையில் நின்ற ஒரு சிறுமி அவன் கையில் கொடுத்தாள். அவளுக்குச் சுமார் பத்து வயது இருக்கும். கடிதத்தை வாங்கிக் கொண்ட சிவராஜ் சிறிது வியப்புடன் அந்தப் பெண்ணைப் பார்த்து, "கடிதம் யார் கொடுத்தார்கள்?" என்று கேட்டான். "சகுந்தலை அம்மாள்" என்றாள் அந்தச் சிறுமி. "சகுந்தலை அம்மாளா? அது யார்?" என்று சொல்லிக் கொண்டே கடிதத்தைப் பார்த்தபோது அதில் விலாசம் எழுதவில்லை என்பதைக் கண்டான். "எனக்குத்தானா கடிதம், குழந்தை! விலாசம் எழுதவில்லையே?" என்றான்.

"உங்களுக்குத்தான், ஐயா! அம்மா உங்கள் கையிலேயே கொடுக்கச் சொன்னாங்க!" என்றாள் சிறுமி. "என் கையிலேயே என்றால், நான் யார் தெரியுமா, உனக்கு?" என்றான் சிவராஜ். "தெரியாமே என்ன? நீங்கதானே புரட்சி வீரர் சிவராஜ்? நீங்கள் விடுதலை யானதும் தெருத் தெருவாக ஊர்வலம் விட்டாங்களே! உங்க பிரசங்கங்கூடக் கேட்டிருக்கிறேனே!" என்றாள் சிறுமி.

புகழ்ச்சி என்பது எப்போது கிடைத்தாலும், யார் மூலமாகக் கிடைத்தாலும் அதனால் சந்தோஷப்படாதவர் யாரும் இல்லை. எவ்வளவோ பொது மேடைகளில் எத்தனையோ புகழ்ச்சிகளைக் கேட்டிருந்த சிவராஜுக்கு அந்த அறியாத சிறுமியின் புகழ்ச்சிகூட மகிழ்ச்சி அளிக்கத்தான் செய்தது.

"அடே, அப்பா! ரொம்ப கெட்டிக்காரப் பெண்ணாயிருக்கிறாயே?" என்று அவளுடைய முதுகில் தட்டிக் கொடுத்தான். சிறுமியோ அவனிடமிருந்து விடுவித்துக் கொண்டு அங்கிருந்து ஒரே ஓட்டமாக ஓடிப் போய்விட்டாள்.

மறுபடியும் கையில் இருந்த விலாசம் எழுதாத கடிதத்தைச் சிவராஜ் பார்த்ததும், "சகுந்தலை அம்மாள் யார்?" என்ற கேள்விக்கு அந்தப் பெண் பதில் சொல்லவில்லை என்பது நினைவு வந்தது. "இதென்ன கூத்தாயிருக்கிறது? நேற்று ஒரு திக்கற்ற பார்வதியிடமிருந்து கடிதம் வந்தது. இன்று ஒரு சகுந்தலை அம்மாவிடமிருந்து கடிதம் வருகிறது. அபலை ஸ்திரீகளைக் காப்பாற்றுவதே நம்முடைய தொழிலாய்ப் போய்விடும் போலிருக்கிறதே!" என்று எண்ணித் தனக்குத் தானே புன்னகை செய்து கொண்டான். தெருவில் நின்று கடிதத்தைப் பிரித்துப் படிக்க விரும்பாமல் தன்னுடைய அறையை நோக்கி நடந்தான். அங்கே இன்ஸ்பெக்டர் தனராஜ் இருக்கிறார் என்பதுகூட

அச்சமயம் அவனுக்கு மறந்து போய் விட்டது. தனராஜை அங்கிருந்து சீக்கிரம் அனுப்புவதில் நமது புரட்சி வீரருக்கு அவ்வளவு பரபரப்பு ஏன் ஏற்பட்டிருந்தது என்பதை வாசகர்கள் இப்போது ஊகிக்கலாம்.

இன்ஸ்பெக்டர் தனராஜ் அறையிலிருந்து போனதும், சிவராஜ் கடிதத்தைப் பிரித்துப் பார்த்தான். கையெழுத்து நேற்று வந்த கடிதத்திலிருந்தது போலவே தோன்றிற்று. கடிதத்தின் கீழேயும் 'அபலை ஸ்திரீ' என்று கையெழுத்துப் போட்டிருந்தது. பின்னர், கடிதத்தில் எழுதியிருந்ததைப் படித்தான்:—

"ஐயா! இந்த அபலைப் பெண்ணின் கண்ணீரைப் பார்த்தபிறகும் தாங்கள் என் வார்த்தையில் அவநம்பிக்கை கொண்டீர்கள். என் வார்த்தையை நான் நிரூபிக்கத் தயார் என்று சொன்னேன். இன்று இரவே அப்படி நிரூபிக்கச் சித்தமாயிருக்கிறேன். இன்று இரவு கோனார் வீதியிலுள்ள இரண்டு மச்சுக் கட்டடத்துக்கு வரும்படியாக மன்றாடிக் கேட்டுக் கொள்கிறேன். கீழ் வீட்டில் விளக்கு வெளிச்சம் இராது. வாசற்புறமுள்ள மச்சுப் படி ஏறி மேலே வரவும். கட்டாயம் வருவீர்கள் என்று நம்புகிறேன். நான் நிர்க்கதியானவள். பெரிய அபாயத்தில் சிக்கிக் கொண்டிருக்கிறேன். அதெல்லாவற்றையும் விடத் தாங்கள் என் வார்த்தையில் அவநம்பிக்கை கொண்டீர்கள் என்பதுதான் அதிகமாக என் மனதைப் புண்படுத்துகிறது.

இப்படிக்கு,
அபலை ஸ்திரீ."

மேற்படி கடிதத்தைப் படித்ததும் சிவராஜின் உள்ளம் பெருங் குழப்பத்தை அடைந்தது. நேற்று வந்து கண்ணுங் கண்ணீருமாய் நின்று தன்னுடைய உதவியைக் கோரிய ஸ்திரீதான் இந்தக் கடிதமும் எழுதியிருக்கிறாள். ஆனால் அந்தச் சிறுமி 'சகுந்தலை அம்மாள்' என்று சொன்னது ஏன்? நேற்று 'பார்வதி' என்று அவள் சொன்னது பொய்யா? அல்லது இந்தச் சிறுமி இன்று கூறியது பொய்யா? இரண்டு பேரில் ஒருவர் எதற்காக இந்தப் பொய் சொல்லியிருக்க வேண்டும்?

அது மட்டுமல்ல; நேற்று வந்த ஏழை உபாத்தியாயினி தன்னைத் துன்புறுத்துவதாக ஒரு பெரிய மனிதரின் பெயரைச் சொன்னாள் அல்லவா? அன்று காலையில் விசாரித்ததில் அவர் ஒரு வாரமாக ஊரிலேயே இல்லையென்றும் சென்னைப்பட்டணம் சென்றிருக்கிறார் என்றும் சிவராஜுக்குத் தெரிய வந்தது. அப்படியானால், இன்று இரவு அவள் எந்த வார்த்தையை நிரூபித்துக் காட்டப் போகிறாள்?

இதெல்லாம் ஒரு வேளை அந்தப் பகாசுரன் துரைராஜின் சூழ்ச்சியாயிருக்குமோ? இன்றிரவு தானும் இன்ஸ்பெக்டர் தனராஜூம் மேற்கொண்டிருக்கும் முயற்சியைத் தெரிந்து கொண்டு இம்மாதிரி தன்னை மடக்கிப் போடுவதற்கு யுக்தி செய்திருக்கிறானோ?

ஆம்; அந்தக் கறுப்பு மார்க்கெட் மன்னன் இதுவும் செய்யக் கூடியவன், இன்னமும் செய்யக் கூடியவன்தான். ஆனால் அந்தப் பெண் அவனுடைய சூழ்ச்சிக்குக் கருவியாகச் சம்மதித்திருப்பாளா? இராது, இராது. அந்தப் பெண்ணின் முகத்திலே தோன்றிய துயரமும், கண்ணிலே துளித்த கண்ணீரும் பொய்யாயிருக்க முடியாது! பின்னர் மேலே குறிப்பிட்ட முரண்பாடுகளுக்குக் காரணம் என்ன?

பலவிதமாக யோசித்துக் கடைசியில், 'எது எப்படியானாலும் கடிதத்தில் குறிப்பிட்ட வீட்டுக்குக் குறிப்பிட்ட சமயத்துக்குப் போய்ப் பார்த்து விடுவது' என்று அவன் தீர்மானித்தான். சிவராஜின் சுபாவ குணத்தில் இயற்கையாக ஏற்பட்டிருந்த துணிச்சல் மேற்படி தீர்மானத்துக்கு முக்கிய காரணமாயிருந்தது. கண்டிராக்டர் துரைராஜ் கள்ளச் சாக்கு அனுப்புவதைக் கண்டு பிடிப்பதற்கு இரவு பன்னிரண்டு மணிக்குப் போனால் போதுமானது. கடிதத்தில் குறிப்பிட்ட வீட்டுக்குப் பத்தரை மணிக்குப் போக வேண்டும். அப்புறம் பிடாரி கோவிலுக்குப் போய்ச் சேருவதற்கு வேண்டிய அவகாசம் இருக்கிறதல்லவா?

ஒரு வேளை, அந்தப் பெண் கூறியதெல்லாம் உண்மையாயிருந்தால், அவளைத் துன்புறுத்தும் துஷ்டன் யாராயிருந்த போதிலும் அவனைத் தண்டித்து அவளைக் காப்பாற்றுவது தன்னுடைய கடமை. ஏதோ ஒரு காரணத்துக்காகத் தன்னுடைய உண்மைப் பெயரை அவள் சொல்லாமல் கற்பனைப் பெயரைச் சொல்லியிருக்கலாம். அந்தச் சிறுமி தவறாக ஒரு பெயருக்குப் பதில் இன்னொரு பெயரைச் சொல்லியிருக்கவும் கூடும். இது மன்னிக்க முடியாத அவ்வளவு பெருங் குற்றம் ஆகாது. அல்லது அந்தக் கறுப்பு மார்க்கெட் அரக்கனுடைய சூழ்ச்சியாயிருக்கும் பட்சத்தில், அதையும் ஒரு கை பார்த்துவிட வேண்டியதுதானே! அவனுடைய சூழ்ச்சிக்குப் பதில் சூழ்ச்சி செய்யத் தனக்குச் சக்தி இல்லாமலா போய்விடும்? ஒரு நாளும் இல்லை.

இவ்வாறு அன்று சாயங்காலம் வரையில் சிவராஜ் சாங்கோபாங்கமாக யோசனை பண்ணி முடிவு செய்து கொண்டு, இரவு பத்து மணிக்கு மேல் மாசிக் கோனூர் வீதியில் உள்ள இரட்டை மாடி வீட்டுக்குப் போய்ச் சேர்ந்தான். கடிதத்தில் குறிப்பிட்டிருந்தது போலவே கீழ்க் கட்டு இருளடைந்திருந்தது. வாசல் தாழ்வாரத்தில் மச்சுப் படிகளும் இருந்தன. மச்சுப் படி ஏறிச் சிவராஜ் மேலே போனான். எவ்வளவு தான் தீரமும் துணிச்சலும் உள்ளவனானாலும் அந்த மச்சுப்படிகளில் ஏறும் போது ஏதோ விபரீத சம்பவம் நடக்கப் போகிறதென்னும் உணர்ச்சியும் அதன் காரணமான திகிலும் அவன் அந்தரங்கத்தில் தோன்றத்தான் செய்தன. ஆயினும் கோழைத்தனத்துக்கும் பயத்துக்கும் இடம் தரலாகாது என்னும் உறுதியுடன் பல்லைக் கடித்துக் கொண்டு படிகளில் ஏறி மேல் மாடியின் தாழ்வாரத்தை அடைந்தான்.



அங்கு நின்று ஜன்னல் வழியாகப் பார்த்த போது, உள்ளே தூரத்தில் முணுக்கு முணுக்கு என்று சிறு வெளிச்சம் தெரிந்தது. சிவராஜ் இலேசாகக் கதவைத் தட்டினான். கையில் ஹரிகேன் லாந்தருடன் யாரோ ஒருவர் வந்தது தெரிந்தது. "யார் அது?" என்னும் பயங்கொண்ட பெண் குரலைக் கேட்டதும், தன்னிடம் பாதுகாப்புக் கோரிய பெண்தான் வருகிறாள் என்று தெரிந்து கொண்டான். சிவராஜ் தான் இன்னான் என்று தெரிவித்துக் கொண்டதும் கதவு திறந்தது. லாந்தர் வெளிச்சத்தில் அந்தப் பெண்ணின் முகம் சொல்ல முடியாத பீதி குடி கொண்டதாய்க் காணப்பட்டது. சிவராஜூக்கு அவள் மௌனமாக வரவேற்பு அளித்து, அவன் உள்ளே பிரவேசித்ததும் கதவைத் தாள் இட்டுக் கொண்டு பின் கட்டுக்கு அழைத்துச் சென்றாள். அங்கே இருந்த பெஞ்சியைக் குறிப்பிட்டு உட்காரும் படி சமிக்ஞை செய்தாள்.

சிவராஜ் உட்கார்ந்ததும் அவள் தயங்கித் தடுமாறிய குரலில், "தாங்கள் வரப் போவதில்லை என்று நினைத்தேன்; வந்து விட்டீர்கள்!" என்று முணுமுணுத்தாள்.

"நான் வரமாட்டேன் என்பதாக ஏன் நினைத்தாய்? நான்தான் நீ அழைக்கும் போது வருவதாகச் சொல்லியிருந்தேனே? என் வார்த்தையில் உனக்கு நம்பிக்கை யில்லையா?" என்று சிவராஜ் கேட்டான்.

"தங்களிடம் எனக்கு நம்பிக்கை யில்லாமலில்லை. பூரண நம்பிக்கை யிருந்த படியால்தான் தங்களை நான் ஏகாங்கியாய் இருக்குமிடத்துக்கு வரச் சொன்னேன். ஆனால் நான்தான் தங்களை ஏமாற்றி விட்டேன். ஐயா! என்னை மன்னியுங்கள்! என்னுடைய பெயர் பார்வதியல்ல!" என்று தழதழுத்த குரலில் அந்தப் பெண் கூறினாள். அந்த வார்த்தைகளைத் தொடர்ந்து எங்கிருந்தோ ஒரு கண நேரத்தில் அவளுடைய கண்களில் கண்ணீர் துளித்தது.

சிவராஜுக்குத் தூக்கிவாரிப்போட்டது. பொய்ப் பெயரைச் சொல்லி அவள் தன்னை ஏமாற்றியதைச் சாமர்த்தியமாக அவளுடைய வாய்ப் பொறுப்பிலிருந்தே வரவழைத்து அவளைக் கண்டிக்க வேண்டும் என்று எண்ணியிருந்தான். ஆனால் அவளே இப்படிக் கண்ணீருடன் கதையை ஆரம்பித்ததும் சிவராஜ் கடினப் படுத்தி வைத்துக் கொண்டிருந்த மனது இளகி விட்டது. "இது என்ன பிரமாதம்? உன் பெயரை மாற்றிச் சொன்னதினால் என்ன குடி முழுகிப் போய்விட்டது? இதற்காக வருத்தப்பட வேண்டாம். உன் பெயர் பார்வதி இல்லை, சகுந்தலை என்பது எனக்கு முன்பே தெரியும்!" என்றான் சிவராஜ்.

இதைக் கேட்டதும் வியப்பும் துயரமும் நன்றியறிதலும் போட்டியிட்ட முகபாவத்துடனும், கண்ணீர் ததும்பி வழிந்த கண்களுடனும் சகுந்தலை சிவராஜைப் பார்த்து,



"ஆகா! அது தெரிந்துமா வந்தீர்கள்?" என்று கேட்டான்.

"ஆம்; தெரிந்துதான் வந்தேன். ஏதோ ஒரு முக்கிய காரணத்தினால் உன்னுடைய பெயரை மாற்றிச் சொல்லி யிருக்கிறாய் என்று நினைத்தேன்!"

"தங்களைப் போன்ற உத்தம புருஷருடன் சகவாசம் செய்யத் தகுதியற்றவள் நான். தங்களிடம் உதவி கோருவதற்கே லாயக்கற்றவள். என் தலைவிதி எப்படியோ, அப்படி என் கதி ஆகிவிட்டுப் போகிறது. நான் விழப்போகும் படுகுழியில் தங்களையும் சேர்த்து நான் ஏன் தள்ளவேண்டும்? ஐயா! இந்த துரதிர்ஷ்டக்காரி எப்படியாவது நாசமாய்ப் போகட்டும் என்று விட்டுவிட்டுத் தாங்கள் போய் விடுங்கள்!" என்று சொல்லிச் சகுந்தலை விம்மினாள்.

சிவராஜின் உள்ளம் அப்போது அனலில் மெழுகாக உருகிற்று. "சகுந்தலை! இது என்ன பேச்சு? உனக்கு என் உதவி தேவை இல்லையென்றால், இதோ இந்த நிமிஷமே போய் விடுகிறேன். ஆனால் உன்னை நீ நொந்து கொள்வதற்கு எந்த விதக் காரணமும் எனக்குப் பிடிபடவில்லை. ஏன் இப்படிப் புலம்புகிறாய்? உனக்கு எந்த விதமான ஆபத்து வந்திருக்கிறது, எந்தப் போக்கிரி உன்னைத் துன்புறுத்துகிறான் என்பதை உள்ளது உள்ளபடி சொல்லு. உன்னை நான் சத்தியமாகக் காப்பாற்றுகிறேன். அதற்காக உன்னிடம் எவ்விதமான பிரதிப் பிரயோஜனத்தையும் நான் எதிர்பார்க்கவில்லை. இதை நிச்சயமாய் நம்பு!" என்று உணர்ச்சி நிறைந்த வார்த்தைகளைக் கூறினான்.

"ஐயா! தாங்கள் சொல்லும் ஒவ்வொரு வார்த்தையும் என் நெஞ்சில் ஈட்டியால் குத்துவது போலிருக்கிறது. தங்களைப் போன்ற சத்திய புருஷரை இப்படி ஏமாற்றி விட்டோமே என்று என் மனது படாத பாடு படுகிறது. யாரோ ஒருவர் என்னைப் பலவந்தப் படுத்துவதாகவும் துன்புறுத்துவதாகவும் சொன்னேனே, அதெல்லாம் முழுப் பொய்!......"

"என்ன! பொய்யா?" என்று சிவராஜ் கூச்சலிட்டான். இப்படி அவள் சொல்லப் போகிறாள் என்று அவன் கொஞ்சம் கூட எதிர்பார்க்கவில்லை.

"ஆம், ஐயா! பொய்தான். தங்களுக்குப் பெரிய துரோகம் செய்துவிட்டேன்!"

"உன்னுடைய முதல் கடிதத்தில் எழுதியிருந்தது, இரண்டாவது கடிதத்தில் எழுதியிருந்தது, எல்லாம் பொய்யா?"

"ஆம்; எல்லாம் பொய்தான்! ஒரு துஷ்ட மனிதருடைய துர்ப் புத்தியைக் கேட்டு இந்தப் பாதகத்தைச் செய்தேன். எப்படியாவது தங்களை இன்று இராத்திரி இவ்விடம் வரவழைத்துவிட வேண்டும் என்று அவர் சொன்னார். எதற்காகச் சொன்னார் என்பது எனக்குத் தெரியாது."

"ஆஹா! கடைசியில் நான் சந்தேகப் பட்டதே சரியாய்ப் போயிற்று. பெண்ணே! என்ன லாபத்தை உத்தேசித்து இப்பேர்ப் பட்ட மோசடி வேலை செய்தாய்? பணத்துக்காகவா? அல்லது......"

சகுந்தலை விம்மி அழத் தொடங்கினாள். தேம்பிக்கொண்டே, "என்னை மன்னித்து விடுங்கள்! பணத்துக்காக இல்லை. இப்படி நான் செய்யாவிட்டால், என்பேரில் அபாண்டத்தைச் சுமத்தி வேலையை விட்டுத் தள்ளி விடப் பண்ணுவதாகப் பயமுறுத்தினார். நான் ஏழை. என்னுடைய சொற்ப சம்பளத்தைக் கொண்டு நானும் என் தங்கையும் ஜீவனம் நடத்தி வருகிறோம். வேலை போய்விட்டால் நான் என்ன செய்வேன்? அதனால்தான்..." என்று சொல்லி மேலே பேச முடியாமல் அதிகமாக விம்மினாள்.

"சகுந்தலை! அழவேண்டாம்! உன்னுடைய குற்றத்தையும் நீ என்னை ஏமாற்றினதையும் மன்னித்து விடுகிறேன்...... ஆனால் இப்படி உன்னைப் பயமுறுத்தி இந்த மோசடி வேலையைச் செய்யப் பண்ணிய மனிதன் யார் என்று மட்டும் சொல்லி விடு. ஒரு பெண் பிள்ளையை இப்படி உபயோகப் படுத்திய பாதகனை நான் இலேசில் விடப் போவதில்லை. அவனைத் தொலைத்துவிட்டு மறு காரியம் பார்க்கிறேன்."

"ஐயா! அவர் ரொம்பப் பெரிய மனிதர். சக்தியும் செல்வாக்கும் உள்ளவர். அவருடைய பெயரைச் சொல்லவும் அச்சமாயிருக்கிறது."

"சும்மாச் சொல்! உன்னை யாரும் எதுவும் செய்யாமல் நான் பார்த்துக் கொள்கிறேன். நேற்றுச் சாயங்காலம் நீ சொன்ன பெரிய மனிதர் இல்லை என்பது நிச்சயம். அவர் ஊரிலேயே இல்லையென்பது எனக்குத் தெரியும்......"

"ஆகா! உங்களுக்கு எல்லாம் தெரிந்திருக்கிறது. அவர் இல்லைதான். தாங்கள்

நேற்றுக் கேட்டவுடனே, ஒன்றும் பதில் சொல்லாமலிருந்தால் என்மேல் அவசம் பிக்கை கொள்வீர்கள் என்று முதலில் ஞாபகத்துக்கு வந்த பெயரைச் சொன்னேன். அதற்காக என்னை மன்னியுங்கள்.''

"மன்னிப்பும் மண்ணாங் கட்டியும் அப்புறம் ஆகட்டும். உன்னை இந்த வேலை செய்யத் தூண்டியவனின் பெயரைச் சொல்! அவனுக்குத் தக்க புத்தி கற்பித்து விட்டு மறு காரியம் பார்க்கிறேன்.''

"சொல்லப் பயமா யிருக்கிறது, ஐயா! இந்தச் சுவர்களும் தூண்களும்கூடக் கேட்டுக் கொண்டிருந்து அவரிடம் கோள் சொல்லுமோ என்று பயப்படுகிறேன். தங்களுக்குத்தான் எல்லாம் தெரிந்திருக்கிறதே? அவர் பெயர் மட்டும் தெரியாமலா இருக்கும்?''

"தெரியும், தெரியும். ஆனாலும் உன் வாய்ப்பொறுப்பாக அறிய விரும்புகிறேன்.''

"ஐயா! என் என்னை இந்தக் கொடுமை செய்கிறீர்கள்?''

"கொடுமையாவது ஒன்றாவது? இவ்வளவு துணிச்சலான காரியமெல்லாம் செய்து விட்டு, ஒரு மனிதனுடைய பெயரைச் சொல்லுவதற்கு ஏன் பயப்படுகிறாய்?''

"அவர் எல்லா இடத்திலும் ஒற்றர்களை வைத்திருக்கிறார். நான் தங்களிடம் சொன்னேன் என்று தெரிந்தால்......?''

"தெரிந்து விட்டால் ஒன்றும் தலை போய்விடாது. உன்னைக் காப்பாற்ற நான் இருக்கிறேன். புதிய விஷயம் ஒன்றுமில்லை. எனக்கே தெரிந்த காரியந்தான். என்னுடைய பெயரில் பாதி அவனுடைய பெயரிலும் இருக்கும். உண்டா, இல்லையா?''

"ஆம், ஐயா! அவர் தங்களுடைய சிநேகிதர் என்பது நேற்றுத்தான் எனக்குத் தெரிந்தது. தங்களைப் போன்ற உத்தமருக்கு அந்த மனிதருடைய சிநேகம் எப்படிப் பிடிக்கிறதோ, தெரியவில்லை.''

"என்ன பிதற்றுகிறாய், பெண்ணே! அந்த நீசனும் நானும் சிநேகம் என்று சொன்ன உன் நாவை அலம்ப வேண்டும்.''

"அப்படியானால் சிநேகிதம் போலப் பாசாங்கு செய்கிறீர்கள் போலிருக்கிறது. நேற்றுச் சாயங்காலம் தங்கள் அறைக்கு நான் வந்தபோது இன்ஸ்பெக்டர் தனராஜ் தங்கள் அறையிலிருந்து இறங்கிச் சென்று கொண்டிருந்தார். ஜாக்கிரதையாகக் காரியத்தை முடிக்கும்படி எனக்கு ஜாடை காட்டி விட்டுப் போனார்!''

அந்த வீட்டின் மேல் மாடி அப்படியே இடிந்து சிவராஜனின் தலையில் விழுவது போலிருந்தது. அவன் தன்னுடைய பெயரில் பாதி அந்த மனிதன் பெயரிலும் இருக்கும் என்று சொன்னபோது, கண்டிராக்டர் துரைராஜை நினைத்துக் கொண்டு சொன்னான். போலீஸ் இன்ஸ்பெக்டர் தனராஜைப் பற்றி அவன் எண்ணவேயில்லை.

சிறிது நேரம் பிரமித்துப் போய் இருந்து விட்டு, "பெண்ணே! நீ கூறிய எத்தனையோ பொய்களை இதுவரையில் நம்பினேன். ஆனால் இந்தப் பொய்யை நம்பமுடியாது!'' என்றான் சிவராஜ்.

"ஐயா! தாங்கள் பொய் சொன்னால் தான் நம்புவீர்கள். உண்மையைச் சொன்னால் நம்ப மாட்டீர்கள் போலிருக்கிறது!'' என்றாள் சகுந்தலை.

"உன்னுடைய பொய்களையும் உண்மைகளையும் பிரித்துக் கண்டு பிடிப்பது மிகவும் கடினமான காரியந்தான். ஆனாலும் நீ வேறு யாரைப் பற்றிச் சொன்னாலும் ஒரு வேளை நம்புவேன். இன்ஸ்பெக்டர் தனராஜைப் பற்றி இவ்வளவு நீசத்தனமான காரியத்தை நம்பவே மாட்டேன்......''

"அப்படியானால், இந்தக் கடிதம் என்னிடம் எப்படி வந்தது என்று தயவுசெய்து சொல்லுங்கள்!'' என்று சொல்லிக் கொண்டே அபலை சகுந்தலை ஒரு கடிதத்தை நீட்டினாள். அது முதல் முதலில் அவன் சிவராஜனுக்கு எழுதி யனுப்பிய கடிதந்தான். அதைக் காணுமல் தான் தேடிய விஷயம் சிவராஜனுக்கு ஞாபகம் வந்தது. தான் ஹோட்டலுக்குச் சாப்பிடப் போனபோது தனராஜ் தன் அறையில் தனியாக இருந்ததும் நினைவு வந்தது. இரண்டும் இரண்டு நாலு என்பது எவ்வளவு தெளிவோ, அவ்வளவு தெளிவாக அந்தக் கடிதத்தை இன்ஸ்பெக்டர் தனராஜ்தான் திருடியிருக்க வேண்டும் என்று ஏற்பட்டது. சிறிது தடுமாற்றத்துடன், "இந்தக் கடிதம் உன்னிடம் எப்படி வந்தது?'' என்று சிவராஜ் கேட்டான்.

"கேட்பானேன்? இன்ஸ்பெக்டர் தனராஜ்தான் கொண்டு வந்தார். இந்தக் கடி

தத்தைப் பார்த்துவிட்டுத் தாங்கள் மனங் கலங்கிப் போனதைப்பற்றிப் பரிகாசம் செய்தார். போகும்போது ஞாபக மறதியாக இங்கே இதைப் போட்டுவிட்டுப்போய் விட்டார். இன்று நான் எழுதிய கடிதத்தையும் அவர்தான் எழுதச் சொன்னார். அதையும் மெதுவாகத் தங்களிடமிருந்து அபகரித்துவிட வேண்டுமென்றும் சொன்னார். ஐயா! அந்தப் பாவி மனிதர் ஒருவேளை இங்கே வந்தாலும் வரலாம். அவர் மனதில் என்ன வைத்திருக்கிறாரோ, தெரியாது. தயவு செய்து தாங்கள் உடனே போய் விடுங்கள்" என்றாள் சகுந்தலை.

சிறிது நேரம் சிவராஜ் ஒரே மனக் குழப்பத்தில் ஆழ்ந்திருந்தான்.

"சகுந்தலை! இந்த உலகத்தில் யாரை நம்புவது, யாரைச் சந்தேகிப்பது என்பதே எனக்கு இப்போது தெரியவில்லை. உலகமே சந்தேகமயமாய்ப் போய்விட்டது. இன்ஸ்பெக்டர் தனராஜ் இப்படிச் செய்யக் கூடியவர் என்று கொதிக்கும் எண்ணெயில் கையை விட்டுக்கொண்டு யாராவது சத்தியம் செய்திருந்தாலும் இன்று சாயங்காலம் வரையில் நான் நம்பி யிருக்கமாட்டேன். இப்போதும் எனக்குப் பூரண நம்பிக்கை ஏற்படவில்லை. எல்லாவற்றையும் ஆர அமர யோசித்து முடிவுக்கு வரவேண்டும். நீ சொல்வதெல்லாம் உண்மை யென்று ஏற்பட்டால், அவனுடைய முகத்திலேயே இனிமேல் விழிக்கமாட்டேன். உன்னையும் அந்த மனிதனுடைய கொடுமையிலிருந்து காப்பாற்றுவேன். இப்போது நீ சொல்கிற படி நான் போய் விடுவதுதான் நல்லது" என்று சொல்லிக் கொண்டே சிவராஜ் போவதற்கு எழுந்தான்.

"ஐயா! தங்களுடைய பெரிய குணத்தை நினைத்தால் என் மனம் பரவசமடைகிறது. இவ்வளவுக்குப் பிறகும் என்னைக் காப்பாற்றுவதாகச் சொல்கிறீர்களே! — என்னுடைய துயரக் கதையை நான் முழுதும் சொல்லி முடிக்கவில்லை. இன்னும் பாக்கி யிருக்கிறது. மற்றொரு சமயம் சொல்கிறேன். தயவுசெய்து இன்னும் ஒரே ஒரு நிமிஷம் உட்காருங்கள். வீதியில் காலடிச் சத்தம் கேட்கிறது. இந்த நேரத்தில் தாங்கள் இங்கிருந்து போவதை யாராவது பார்த்தால் தங்களுக்கும் கெட்ட பெயர் உண்டாகும்; எனக்கும் கெட்ட பெயர் ஏற்படும். இதோ நான் போய் வாசற் பக்கம் பார்த்து விட்டு வருகிறேன். அது வரை இரண்டு நிமிஷம் பொறுத்துக் கொண்டிருங்கள்!"

இவ்வாறு சகுந்தலை கெஞ்சும் குரலில் கூறியதைக் கேட்டபோது, அதிலுள்ள நியாயத்தைச் சிவராஜ் உணர்ந்து மறுபடியும் பெஞ்சியில் உட்கார்ந்து கொண்டான். ஒரு நிமிஷத்துக்கு முன்னால் வீதியில் மோட்டார் சைக்கிளின் சத்தம் இலேசாகக் கேட்டதுபோலத் தோன்றிய விஷயம் அவனுடைய குழப்பமடைந்த மனதிற்கு அப்போதுதான் ஞாபகத்துக்கு வந்தது. ஒருவேளை இன்ஸ்பெக்டர் தனராஜாக இருக்குமோ? அப்படியானால் தன்னுடைய நிலைமை நெருக்கடியாகவல்லவா போய்விடும்? அந்த நேரத்தில் பிடாரி கோவிலில் இருப்பதற்குப் பதிலாக இந்த உபாத்தியாயினி தன்னந் தனியாக இருக்கும் வீட்டில் தான் வந்து இருப்பதற்கு என்ன சமாதானத்தைச் சொல்வது? இன்ஸ்பெக்டருடைய அயோக்கியத்தனம் பற்றி அவரைத் தான் கண்டிப்பதற்குப் பதிலாக அவரல்லவா தன்னை எளிக்காட்டும் படியாக ஏற்பட்டுவிடும்?

இவ்வித மனச் சங்கடத்துக்கு ஆளான சிவராஜ், பலகையில் தன் அருகில் கிடந்த புத்தகம் ஒன்றை எடுத்துப் புரட்டினான். அந்தப் பழைய புத்தகத்தில் அவனுடைய மனச் சங்கடத்தை நிவர்த்திப்பதற்கு வழி ஒன்றும் காணவில்லை.

வீதிப் பக்கம் பார்ப்பதற்காக முன் பக்கத்து ஹாலுக்குச் சென்றிருந்த சகுந்தலை அப்போது மிக்க பரபரப்புடன் உள்ளே வந்து, பீதி நிறைந்த குரலில் "ஐயா! தாங்கள்தான் என்னை இச் சமயம்......" என்று சொல்ல ஆரம்பித்தவள், மேலே வாக்கியத்தை முடிக்காமல் திறந்த வாய் திறந்தபடி நின்றாள்.

அவளுடைய பீதிக்கும் திகைப்புக்கும் காரணம் என்னவாயிருக்கலாம் என்று சிவராஜ் சிந்தித்த அதே காலத்தில், அவனுடைய பின் தலையில் படார் என்று ஏதோ மோதியது போலிருந்தது. அந்த வீடும் விளக்கும் சகுந்தலையும் விர்ரென்று சுழலும் அதிசயமான காட்சியைச் சிவராஜ் கண்டான். அந்தச் சுழற்சியின் நடுவில், இன்ஸ்பெக்டர் தனராஜின் தோற்றமும் தென்பட்டது. திடீரென்று தனராஜின் உருவம் ஆயிரம் பதினாயிரம் மின்னல் கிரணங்களாக மாறி நாலாதிசையும் பாய்ந்தது. அவ்வளவுதான்; சிவராஜ்

மறுகணம் அடியோடு நினைவை இழந்து தரையில் தடாரென்று விழுந்தான்.

• • •

எல்லையில்லாத சூனியத்தி லிருந்து, ஆழமறியாத மௌனக் கடலிலிருந்து, கன்னங் கரிய இருள் சூழ்ந்த பாதாள உலகத்திலிருந்து மேலே மேலே மேலே சிவராஜ் வந்து கொண்டிருந்தான். அவனுடைய மூடிய கண் இமைகளின் மீது ஒரு மலையே உட்கார்ந்திருந்தது போல், பாரமாயிருந்தது. ஏதேதோ விவரம் தெரியாத குழப்பமான சத்தங்கள் கேட்டன. சற்று நேரத்துக் கெல்லாம் அந்தச் சத்தங்கள் தெளிவடைந்து மனிதக் குரலாக மாறின. ஒரு பெரு முயற்சி செய்து கண்ணிமைகளின் மீதிருந்த பாரத்தை அப்புறப் படுத்திவிட்டுக் கண்களைத் திறந்தான். கொஞ்சம் பிரயத்தனப் பட்டு ஞாபக சக்தியை வரவழைத்துக் கொண்டான். போலீஸ் இன்ஸ்பெக்டர் தனராஜ் வீட்டின் மேல் மாடி அறையில் ஒரு கட்டிலில் தான் படுத்துக் கிடப்பது தெரிந்தது. நர்ஸ் உடை தரித்த ஒரு பெண்ணுடன் இன்ஸ்பெக்டர் தனராஜ் பேசிக் கொண்டிருந்தார். தன்னுடைய தலையின் பின்புறத்தில் கழுத்துக்கு மேலே ஏன் அப்படி வலிக்கிறது என்று யோசித்தான். அப்போது தனராஜ் அவனைத் தற்செயலாகப் பார்த்தார். அவனுடைய கண்கள் திறந்திருப்பதைப் பார்த்து, "ஆ! சிவராஜ்! பிழைத்தாயா?" என்றார். சிவராஜுக்கு அவர்கள் இருவரும் கள்ள மார்க்கெட் வண்டிகளைக் கண்டு பிடிக்கப் போக உத்தேசித்திருந்தது ஞாபகம் வந்தது. "மிஸ்டர் தனராஜ்! காரியம் என்ன ஆயிற்று? கள்ளன் பிடிபட்டானா?" என்று ஈன ஸ்வரத்தில் கேட்டான்.

"அப்பனே! அந்தச் செய்தியெல்லாம் அப்புறம் பார்க்கலாம். முதலில் உனக்கு உடம்பு சரியாகட்டும். நீ பிழைத்ததே புனர்ஜன்மம். எனக்குக் கொஞ்சம் அவசர ஜோலி இருக்கிறது. போய்விட்டு வருகிறேன். அதுவரை ஒன்றும் அலட்டிக் கொள்ளாதே! இந்த நர்ஸ் உன்னைப் பார்த்துக் கொள்வாள். அவள் சொல்லுகிறபடி கேள்!" என்றார் தனராஜ்.

அவர் போனபிறகு சிவராஜின் மூளை வேலை செய்ய ஆரம்பித்தது. நேற்றுப் பிற்பகலிலிருந்து நடந்த சம்பவங்கள் ஒவ்வொன்றாக ஞாபகம் வந்தன. (தொடரும்)




# மன்னர்கள்

**ரா.கி.**

மீனம்பாக்கம் ஆகாச விமான நிலயத்தில் ஸ்ரீ தேவதாஸுக்காகக் காத்துக் கொண்டிருந்தபோது, அங்கே இருந்த ஹிக்கின்பாதம்ஸ் புத்தக நிலயத்தைப் பார்க்கலாம் என்று சென்றேன். எற்கெனவே அங்கே ஒர் இளைஞர் நின்று கடைக்காரரோடு சண்டை பிடித்துக் கொண்டிருந்தார். அதாவது சண்டை பிடிப்பது போல் பேசிக்கொண்டிருந்தார். "இங்கே தினப் பத்திரிகை என்னென்ன விற்கிறீர்?" என்று கேட்டார். "மெட்ராஸ் மெயில் விற்கிறோம்!" என்றார் கடைக்காரர். "ஹிந்து, இந்தியன் எக்ஸ்பிரஸ் ஒன்றும் விற்பதில்லையா?" என்று கேட்டார்.

"இல்லை!" என்றார் கடைக்காரர்.

"ஏன்?"

"அதெல்லாம் இங்கே விற்காது!"

"வரவழைத்து விற்றுப் பார்த்தீரா?"

"இல்லை!"

"பின்னே, எதனால் 'விற்காது' என்று சொல்கிறீர்?" — இவ்விதம் கடுமையாகக் கேட்டுவிட்டு, தம் பக்கத்தில் நின்ற காரியதரிசி அல்லது குமாஸ்தாவிடம், "நாளை முதல் இங்கே இந்தியன் எக்ஸ்பிரஸ் விற்பதற்கு ஏற்பாடு செய்யும், குறித்துக் கொள்ளும்!" என்று உத்தரவு போட்டார்.

பிறகு நான் விசாரித்ததில் அந்த இளைஞர்தான் ஸ்ரீ ராமநாத் கோயங்கா அவர்களின் புதல்வர் ஸ்ரீ பகவான் தாஸ் என்று தெரிந்து கொண்டேன். அப்பாவுக்கு ஏற்ற மகன்தான்; சந்தேகமில்லை.

ஸ்ரீ ராம்நாத் கோயங்கா மார்வார் தேசத்தவர். பிர்லா, டால்மியா, ஸெக்ஸேரியா, ஜெஜோடியா முதலிய கோமகர்கள், லட்சாதிபதிகள் எல்லாரும் மார்வார் தேசத்தவர்கள்தான். அவர்களுடைய பிரம்மாண்ட வர்த்தக வெற்றிகளைப் பற்றிப் பேசும்போது, "அவர்களுக்கென்ன? மார்வாரிகள்!" என்று சொல்லித் திருப்தியடைந்து விடுகிறோம். மார்வாரிகள் ஏன் வியாபாரத்திலும் மற்றத் தொழில்களிலும் வெற்றி யடைகிறார்கள் என்று யோசிப்பதில்லை. எந்த வியாபாரத் துறையில் இறங்கினாலும் அவர்கள் , செலுத்தும் ஏகாக்கிர சித்தமும் பிடிவாத முயற்சியும் தான் வெற்றிக்குக் காரணம் என்பதை எண்ணிப் பார்ப்பதில்லை. அன்று ஸ்ரீ பகவான்தாஸ் புத்தகக் கடைக்காரரிடம் சண்டை பிடித்ததைப் பார்த்தபோதுதான் எனக்கு அது நன்றாய் விளங்கிற்று.

ஒரு வாரத்திற்குப் பிறகு மறுபடியும் விமான நிலயத்துக்குச் சென்றபோது விசாரித்தேன். "இண்டியன் எக்ஸ்பிரஸ்" பத்திரிகை இப்போது அங்கே வருகிறதென்றும், வருகிற பிரதிகள் உடனே விற்றுப் போகின்றன என்றும் தெரிந்து கொண்டேன். ஆனால் சென்னையிலிருந்து புறப்படும் விமானங்களில் 'இண்டியன் எக்ஸ்பிரஸ்' 'தினமணி'ப் பத்திரிகைகள் வைக்கப் படுவதில்லை என்பதை ஸ்ரீ பகவான் தாஸுக்கு இதன் மூலம் தெரிவிக்கிறேன். அதற்கும் அவர் ஏற்பாடு செய்தால் ரொம்ப நன்றாயிருக்கும்.

ஸ்ரீ பகவான் தாஸின் சாமர்த்தியம் அத்துடன் நின்றுபோய் விடவில்லை. விமானத்திலிருந்து இறங்கி வரும் ஸ்ரீ தேவதாஸை வரவேற்பதற்காக எல்லாரும் குறிப்பிட்ட எல்லையில் நின்று கொண்டிருக்க, ஸ்ரீ பகவான்தாஸ் மட்டும் விமானம் வந்து நின்ற இடத்துக்கே போய் நின்றுவிட்டார். ஸ்ரீ தேவதாஸ் இறங்கியதும், தம்முடைய வீட்டில் வந்து தங்க வேண்டும் என்னும் விண்ணப்பத்தையும் போட்டுவிட்டார். புகைப் படத்தில் ஸ்ரீ தேவதாஸோடு அவரும் விமானத்திலிருந்து இறங்கி வருவதுபோல் தோன்றுவதைச் சென்ற கல்கி இதழில் வெளியான முதல் படத்தில் நேயர்கள் பார்த்திருக்கலாம். இந்தியா தேசத்தில் பத்திரிகாசிரியர்களுக்குள்ளே யெல்லாம் மிகச் சிறந்த பத்திரிகாசிரியர் மகாத்மா காந்தி. அவருடைய புதல்வர் ஸ்ரீ தேவதாஸ் இன்று சிறந்த பத்திரிகாசிரியராய் விளங்குகிறார். தென்னிந்தியாவில் ஸ்ரீ கஸ்தூரிரங்க அய்யங்கார் தம் காலத்தில்

பிரசித்தி பெற்ற பத்திரிகாசிரியராய் விளங்கியதுடன், பத்திரிகைச் சுதந்திரத்தைக் காப்பாற்றுவதற்காக முன்னணியில் நின்று போராடிப் பெயரும் புகழும் அடைந்தார். அவருடைய புதல்வர் ஸ்ரீ கஸ்தூரி சீனிவாசன் பத்திரிகை உலகில் இப்போது அதே உயரிய ஸ்தானத்தை வகித்து வருகிறார். அம்மாதிரியே ஸ்ரீ ராம்நாத் கோயங்காவின் புதல்வர் ஸ்ரீ பகவான்தாஸ் பெரிய பத்திரிகை முதலாளியாகிக் கொழும்பிலிருந்து லாகூர் வரையில் பல பத்திரிகைகள் நடத்தினால் அதைக் குறித்து எனக்கு ஆச்சரியம் ஒன்றும் இராது.

ஆகாச விமான நிலயத்தில் வரவேற்பு, படமெடுப்பு எல்லாம் ஆனதும், காரில் ஏறும் சமயத்தில் ஸ்ரீ தேவதாஸ் எங்கே தங்குவது என்பதைப் பற்றி ஒரு சிறு விவாதம் ஏற்பட்டுவிட்டது. கடைசியாக எல்லாவிதத்திலும் பொருத்தமான முடிவு, அதாவது 'ஹிந்து' ஆபீஸ் மேல் மச்சில் அவர் தங்குவது என்ற முடிவு ஏற்பட்டது.

* * *

மதராஸ் மத்தியானம் அகில இந்தியப் பத்திரிகாசிரியர்களின் ஆறாவது மகாநாடு கூடியது. சென்ற வருஷம் வரையில் கவர்னரின் மாளிகையாயிருந்து சமீபகாலத்தில் காங்கிரஸ் சர்க்காரின் வசத்துக்கு வந்திருக்கும் அந்த மாளிகையில், பிரதான மண்டபமாகிய 'பாங்குவெடிங்' ஹாலில் மகாநாடு கூடியது. எத்தனையோ வருஷ காலமாக ஹிஸ் எக்ஸெலன்ஸி கவர்னர் துரை, தமது பட்ட மகிஷி கவர்னர் துரைசானியுடன் வீற்றிருந்து தர்பார் நடத்திய மண்டபத்தில், வெள்ளைக்கார துரைமார்களும் துரைசானிகளும் கறுப்புத் துரைகளும் சீமாட்டிகளும் விருந்துண்டு மதுபானம் அருந்தி நடனம் ஆடிக் களித்த விஸ்தாரமான மண்டபத்தில், வெறும் 'சுதேசி' மனிதர்கள் உட்கார்ந்து விவாதம் நடத்தும் காட்சியை, அந்த மண்டபத்தின் சுவர்களில் மாட்டப்பட்டுத் தொங்கிய மாஜி கவர்னர்மார்கள் கண் கொட்டாமல் பார்த்து விழித்துத் திகைத்து அதிசயப்பட்டுக் கொண்டிருந்தார்கள். ஆகா! அந்தக் கவர்னர் துரைமார்களின் படங்களுக்கு மட்டும் திடீர் என்று உயிர் வந்திருந்தால், அங்கே அன்று என்ன கோலாகலம் நடந்திருக்குமோ, யார் கண்டது?

எனினும் ஒரு விதத்தில் யோசித்துப் பார்க்கப் போனால், நாட்டை ஆண்ட கவர்னர்கள் தர்பார் நடத்திய மண்டபத்தில் பத்திரிகாசிரியர்கள் மகாநாடு கூடியது பொருத்தமே யாகும். லாகூரில் பிரசித்தி பெற்று விளங்கிய பிரிட்டிஷ் தளபதியின் சிலையைப் பற்றி நேயர்கள் அறிந்திருப்பார்கள். ஒரு கையில் வாளுடனும் ஒரு கையில் பேனாவுடனும் விளங்கிய அந்தச் சிலையின் அடியில், "நீங்கள் பேனாவினால் ஆளப்பட விரும்புகிறீர்களா? அல்லது கத்தியினால் ஆளப்பட விரும்புகிறீர்களா?" என்று எழுதப்பட்டிருந்த தென்பதையும் கேள்விப்பட்டிருப்பார்கள்.

இதிலிருந்து ஒரு தேசத்தைக் கத்தியின் பலம் கொண்டும் ஆளலாம், பேனாவின் பலம் கொண்டும் ஆளலாம் என்பது ஸ்பஷ்டமாக ஏற்படுகிறதல்லவா?

கத்தியின் பலத்தினால் ஆண்ட வெள்ளைக்காரர்கள் மூட்டை கட்டிக் கொண்டிருக்கும் சமயத்தில், பேனா மன்னர்கள் அதே இடத்தில் மகாநாடு கூடுவது பொருத்தமான காரியந்தானே!

அகில இந்தியாவிலிருந்தும் சுமார் 80 பத்திரிகாசிரியர்கள் வந்து சேர்ந்திருந்தார்கள். எண்ணிக்கைக்கு எண்பது பேர்தான் என்றாலும், ஒவ்வொருவரும் தினந்தோறும் ஏறக்குறைய ஒரு லட்சம் இந்தியப் பிரஜைகளின் அபிப்பிராயங்களை வெளியிடுகிறவர்கள்; அல்லது அவர்களுடைய அபிப்பிராயங்களை உருவாக்குகிறவர்கள். எனவே, அங்கு உண்மையில் எண்பது லட்சம் பேர் கூடியிருந்தார்கள் என்று சொன்னாலும் மிகையாகாது.



போட்டிப் பத்திரிகாசிரியர்கள்
(ஸ்ரீ ஜே.என். ஸானியும், ஸ்ரீ தேவதாஸும்)

அத்தகைய புகழும் சக்தியும் வாய்ந்த அகில இந்தியப் பத்திரிகாசிரியர்களில் சிலரை நமது நேயர்களுக்கு இப்போது அறிமுகப்படுத்த விரும்புகிறேன்.

அலங்கரித்த மேடையின் மீது வீற்றிருந்த ஆசிரியர்களை முதலில் பார்க்கலாம்.

மகாநாட்டின் அக்கிராசனர் ஸ்ரீ தேவ

நாஸுக்கு ஒரு பக்கத்தில் வரவேற்புக் கமிட்டித் தலைவர் மிஸ்டர் ஹெல்ஸும், மற்றொரு பக்கத்தில் சென்ற வருஷத்து அக்கிராசனர் ஸ்ரீ துஷார் காந்தி கோஷும் அமர்ந்திருந்தார்கள்.

மிஸ்டர் ஹெல்ஸ் துரை நமது அன்புக்குரிய "மெட்ராஸ் மெயில்" பத்திரிகையின் ஆசிரியர். பார்வைக்கு வயதான கிழவர் மாதிரி தோன்றுகிறார். ஆனால் அவருடைய பேச்சிலும் எழுத்திலுமோ யௌவனத்தின் சக்தியும் வலிமையும் தீவிரமும் ததும்புகின்றன. "மெட்ராஸ் மெயில்" பத்திரிகையை வழக்கமாகப் படிக்கிறவர்கள், அந்தப் பத்திரிகை வாரத்தில் ஐந்து நாள் தீவிர தேசியப் பத்திரிகையாகவும் வாரத்தில் ஒரு நாள் தீவிர ஏகாதிபத்தியப் பத்திரிகையாகவும் விளங்குவதை அறிவார்கள். ஏகாதிபத்தியப் பத்திரிகையாக விளங்கும் ஒரு நாளைத் தவிர மற்ற நாளெல்லாம் பொது ஜனங்களின் நன்மைக்காக சர்க்காரைத் தாக்கியும் தாங்கியும் வன்மையாக எழுதுவதில் "மெட்ராஸ் மெயில்" பத்திரிகையை யாருமே மிஞ்ச முடியாதென்று தோன்றும். சென்ற ஒரு வருஷத்து "மெட்ராஸ் மெயில்" இதழ்களை எடுத்துப் பார்த்தால், காங்கிரஸ் மந்திரி சபையின் காரியாதிகளைப் பற்றி எத்தனை தலையங்கங்கள் "மெட்ராஸ் மெயில்" எழுதியிருக்கிறதோ அவ்வளவு வேறு எந்தப் பத்திரிகையும் எழுதியதில்லையென்பதைக் காணலாம். பிரகாசம் மந்திரி சபையின் அந்திய காலத்தில், அப்பப்பா! "மெட்ராஸ் மெயில்" தலையங்கங்கள் எவ்வளவு காரசாரமாய் இருந்தன? ஆனால் அவ்வளவு காரத்தையும் ஆந்திரகேசரி பிரகாசம்காரு 'சும்மாப் போடு' என்று வாங்கிச் சாப்பிட்டுவிட்டு, "மெட்ராஸ் மெயில் ஒன்றுதான் சென்னையில் உண்மையான பத்திரிகை" என்று அத்தாட்சியும் கொடுத்துவிட்டார்! இப்படிப்பட்ட இந்திர ஜால வித்தையில் தேர்ந்த மிஸ்டர் ஹெல்ஸ் மகாநாட்டின் வரவேற்புத் தலைவராயிருந்து ஹாஸ்யச் சுவை ததும்பிய தமது வரவேற்புப் பிரசங்கத்தினால் மற்ற வசதிக் குறைவுகளையெல்லாம் பிரதிநிதிகள் மறந்து விடும்படி செய்து விட்டார்.

ஸ்ரீ தேவதாஸின் மற்றொரு பக்கம் இருந்த ஸ்ரீ துஷார் காந்தி கோஷ் இந்திய தேசிய இயக்கத்தில் இணையற்ற பிரசித்தி வாய்ந்த "அமிருத பஜார் பத்திரிகை"யின் ஆசிரியர். பெரிய பரம்பரையில் தோன்றியவர். ஸ்ரீ சிசிர் குமார்கோஷ், ஸ்ரீ மோதிலால் கோஷ் என்னும் சகோதரர்கள் அதிகார வர்க்கத்தின் தாக்குதல்களையெல்லாம் சமாளித்து, "அமிருத பஜார் பத்திரிகை"யைக் காத்து வளர்த்த கதை யாருக்குத் தெரியாது? ஆம்; அந்த வரலாறு கதைமாதிரிதான் இருக்கும்.

சென்ற வருஷத்தில் பத்திரிகாசிரியர் மகாநாட்டுக்குத் தலைமை வகித்துத் திறம்பட நடத்தியதற்காக ஸ்ரீ துஷார் காந்தி கோஷுக்குப் பலர் நன்றி கூறினார்கள். அப்படிப் பாராட்டிப் பேசியவர்களில் பலர் அவருடைய கதை சொல்லும் திறமையைப் பெரிதும் பாராட்டினார்கள். ஸ்ரீ துஷார் காந்தி கோஷ் பதில் வந்தனம் கூற எழுந்த போது, "ஒரு கதை சொல்லுங்கள்!" என்று கூட்டத்தில் ஒரு குரல் எழுந்தது.

"சோதரர்களே! தற்சமயம் என்னால் கதை சொல்ல முடியாமலிருக்கிறது. அதற்காக மிகவும் வருந்துகிறேன். நாலு நாளைக்கு முன்னால் நான் சாப்பிட்டுக் கொண்டிருந்த போது ஒரு மீன் எலும்பு தொண்டையில் சிக்கிக்கொண்டது. பிறகு அது உள்ளேயும் போகமாட்டேனென்கிறது; வெளியிலும் வரமாட்டேன் என்கிறது. ஆகையால் எதையுமே நான் விழுங்க முடியாத நிலையில் இருக்கிறேன். இப்போது நண்பர்கள் கூறிய புகழ்ச்சிகளைக்கூட என்னால் விழுங்க முடியவில்லை!" என்று கூறிச் சபையோரைச் சிரிக்கச் செய்தார்.

வங்காளிகளுக்கு ரஸகுல்லாவும் மீனும் ரொம்பப் பிரியமான உணவுகள் என்பது தெரிந்ததுதான். இருந்தபோதிலும், மீன் எலும்பு தொண்டையில் மாட்டிக் கொண்டது என்று அவர் சொன்னதே ஒரு கதைதானோ என்று சில பிரதிநிதிகள் சந்தேகப்பட்டார்கள். அவர்களில் ஒருவர் தாம் வளர்க்கும் 'ஜிம்மி' என்னும் நாய்க் குட்டியை ஸ்ரீ துஷார்காந்தி கோஷுக்குப் பரிசு அளிக்கவும் முன் வந்தார். "'ஜிம்மி'க்கு எலும்பு என்றால் ரொம்பப் பிரியம்! வயிற்றுக்குள் போன எலும்பைக் கூட வெளியே கொண்டு வந்து விடும்! தொண்டையில் இருக்கும் எலும்பு எம்மாத்திரம்?" என்று அவர் சொன்னார். ஆனால் அவருடைய உதவியை ஸ்ரீ துஷார்காந்தி கோஷ் அடியோடு மறுதளித்து விட்டார்.

மேற்படி மூன்று பேருக்கும் இருபுறத்தில் உட்கார்ந்திருந்தவர்கள் மகாநாட்டின் காரியதரிசிகளான ஸ்ரீ ஜே. என். ஸானியும், ஸ்ரீ 'ஸ்டாலின்' சீனிவாசனும்.

ஸ்ரீ ஜே. என். ஸானி புது டில்லியிலிருந்து வெளிவந்து கொண்டிருந்த

"நேஷனல் கால்" பத்திரிகையின் ஆசிரியர். சமீபத்தில் மேற்படி பத்திரிகையை ஸ்ரீ டால்மியா என்னும் கோடீசுவரர் வாங்கியிருக்கிறார். இப்போது "நியூஸ் கிரானிகல்" என்னும் புதுப் பெயருடன் வெளியாகி வருகிறது. "ஹிந்துஸ்தான் டைம்ஸ்" பத்திரிகையில் கார்ட்டூன் எழுதிப் புகழ்பெற்ற "சங்கர்" என்பவரும், இன்னும் சில உதவி ஆசிரியர்களும் மேற்படி புதிய பத்திரிகையில் அதிக சம்பளத்துக்குப் போயிருக்கிறார்கள்.

பத்திரிகைப் போட்டி என்பது சென்னையிலே மட்டுந்தான் என்பதில்லை, புதுடில்லியிலும் உண்டு என்று மேற்படி விவரங்களினால் தெரிய வந்தது. ஆனால் மேடையின் மீது ஸ்ரீ தேவதாஸும் ஸ்ரீ ஸானியும் சுமுகமாகவும் சிநேகமாகவும் நடந்து கொண்டதைப் பார்த்தவர்கள், அவர்கள் போட்டிப் பத்திரிகை ஆசிரியர்கள் என்பதைக் கண்டு பிடிக்கவே முடியாது.

ஆசிரியர் ஸானி சிறந்த பேச்சுத் திறமையும் விவாதத் திறமையும் உள்ளவர் என்பது மகாநாட்டின் போது தெரிய வந்தது.

அகில இந்தியப் பத்திரிகாசிரியர் மகாநாட்டில் பெரும்பான்மைக் கோஷ்டி ஒன்றும், சிறுபான்மை எதிர்ப்புக் கோஷ்டி ஒன்றும் இருந்தன.

எதிர்ப்புக் கோஷ்டியாரின் எதிர் வாதங்களுக்கு முடிவாகப் பதில் சொல்லும் பொறுப்பு பெரும்பாலும் ஸ்ரீ ஸானி அவர்களின் தலையிலும் தோள்களிலும் விழுந்தன. அதற்குத் தகுந்தபடி அவருடைய தலையும் சரி, தோள்களும் சரி, பெரிதாகவும் விசாலமாகவும் இருந்தன. விஷயங்களை அக்கு வேறு ஆணி வேறாகப் பிய்த்துத் தெளிவாக்கி, ரஸமாகவும் நகைச்சுவையுடனும் பேசி, பெரும்பான்மைக் கோஷ்டியாரின் கட்சியை ஸ்ரீ ஸானி நிலைநாட்டினார்.

மற்றொரு காரியதரிசியான ஸ்ரீ 'ஸ்டாலின்' சீனிவாசனோ, காரியத்தை நடத்திக் கொண்டு போவதிலேயே கண்ணுடைய காரிய துரந்தரராக விளங்கினார். மகாநாட்டில் விவாதம் கொஞ்சம் காரமாகி, உஷ்ணம் ஏறி, 'ரகளை' என்று சொல்லக்கூடிய அளவுக்கு வந்து விடும் என்று ஏற்பட்ட போதெல்லாம், ஸ்ரீ ஸ்டாலின் சீனிவாசன் மேடையில் முன்னால் வந்து விடுவார். சில சமயம் ஒரே உணர்ச்சிமயமாகவும் சில சமயம் ஒரே ஹாஸ்ய மயமாகவும் பேசுவார். சிற்சில சமயம் ஒளிவு மறைவு இல்லாமல் உண்மையைப் பச்சையாகச் சொல்லி விடுவார். "நாம் இத்தனை பேரும் புத்தியில் பிரகஸ்பதிகள் என்றுதான் பொது ஜனங்கள் நினைத்துக் கொண்டிருக்கிறார்கள். ஆனால் என்னுடைய அசட்டுத்தனம் எனக்குத் தெரியும்; உங்களுடைய அசட்டுத்தனம் உங்களுக்குத் தெரியும். வெளியிலே சொன்னால் வெட்கக் கேடு; நம் எல்லாருடைய பிழைப்பிலும் மண் விழுந்து விடும்!" என்று இப்படி ஸ்ரீ ஸ்டாலின் சீனிவாசன் சில பச்சை உண்மைகளை எடுத்து விடும்போது மற்றவர்கள் லச்சை அடைந்து, "ஐயா! நீர் எந்தத் தீர்மானம் கொண்டுவந்தாலும் கையைத் தூக்குகிறோம். தயவுசெய்து இப்படியெல்லாம் பேசி மானத்தை வாங்கவேண்டாம்!" என்று சொல்லத் தயாராகி விடுவார்கள்.

பம்பாயிலும் வடநாட்டிலும் 'ஸ்டாலின்' சீனிவாசன் என்று அழைக்கப்படும் "நேஷனல் ஸ்டாண்டர்டு" பத்திரிகையின் ஆசிரியர் தமிழ் நாட்டில் நமக்கெல்லாம் 'மணிக்கொடி' சீனிவாசன் ஆவர். பம்பாய்த் தமிழ்ச் சங்கத்தின் இவ்வருஷத் தலைவர் அவர்.

சென்ற மாதத்தில் நமது 'மணிக்கொடி' சீனிவாசன் அவர்களுக்கு ஒரு பெரிய விபத்து நேர்ந்தது. பம்பாய் நகரில் மோட்டார் வண்டியில் போய்க் கொண்டிருந்த போது ஒரு பகுதியில் திடீரென்று கலகம் மூண்டிருந்த விஷயம் தெரியாமல் அந்தப் பகுதியில் புகுந்து விட்டார். அங்கே 'சிறுபான்மை'ச் சமூகத்தினர் சிலர் அவருடைய காரைச் சூழ்ந்து கொண்டு வண்டியில் தொத்தி ஏறி விட்டார்கள். நல்ல வேளையாக மோட்டார் ஓட்டி திடசித்தத்துடன் காரை விரைவாக விடவே, ஏறியவர்கள் கீழே விழுந்தார்கள். காரின் மேல் ஒரு கத்தி வீசி எறியப்பட்டது! தெய்வாதீனமாக ஆசிரியர் சீனிவாசனை அது தாக்கவில்லை. காரின் கதவு இடுக்கில் புகுந்து சிக்கிக் கொண்டது. தாக்கிய வேகத்தில் அரை அங்குலம் நுனி வளைந்து போயிருந்த அந்தக் கத்தியை நான் பார்த்தேன். தமிழ் நாட்டுக்கும் தமிழுக்கும் எவ்வளவோ அரிய தொண்டு செய்யவேண்டியவரும் செய்யக் கூடியவருமான ஸ்ரீ மணிக்கொடி சீனிவாசனைக் காப்பாற்றிக் கொடுத்த கடவுளுக்கு நன்றி செலுத்தினேன்.

அகில இந்தியப் பத்திரிகாசிரியர் மகாநாட்டின் காரியதரிசியாயிருந்து ஸ்ரீ சீனிவாசன் செய்துவரும் தொண்டைப் பாராட்டாதவர்கள் யாரும் இல்லை. அந்தப் பாராட்டுதலுக்கு அத்தாட்சி, ஸ்ரீ சீனிவாசன் மீண்டும் வருகிற வருஷத்துக்குக் காரியதரிசியாகத் தேர்ந்தெடுக்கப் பட்டிருப்பதே யாகும். (அடுத்த இதழில் முடியும்)

# வட்டமேஜை

தாராபுரம்,
28—4—'47

"கல்கி" ஆசிரியர் அவர்களுக்கு,

ஆந்திரர்கள், கேரளர்கள், கன்னடர்கள் மூவரும் தத்தமக்குத் தனி மாகாணம் வேண்டுமென்று சொல்லிக் கொண்டு வருகிறார்கள். தமிழர்களும் தங்களுக்குத் தனி மாகாணம் வேண்டுமென்று விரும்புகிறார்கள் என்பதைப் பற்றிச் சந்தேகமில்லை.

ஆனால் ஒரு விஷயம்; மற்ற மூவரும் தத்தம் கோரிக்கையை எவ்வளவு சுறுசுறுப்புடனும் வேகத்துடனும் வற்புறுத்துகிறார்களோ அவ்வளவு வேகத்துடன் தமிழர்கள் இன்னும் வற்புறுத்தவில்லை. "தமிழர்கள் நிதானம் தவறாதவர்கள்; எதையும் படபடப்புடன் செய்துவிட மாட்டார்கள்" என்று பதில் சொல்லப்படுகிறது........ஆனால் "வாயுள்ள பிள்ளை பிழைக்கும்" என்ற பழமொழியை மறக்க முடியுமா?

ஆந்திர மாகாணம் அடைவதற்காகச் செய்யவேண்டிய முயற்சிகளுக்கு டில்லியில் ஆபீஸ் ஒன்று நிறுவப்பட்டிருக்கிறது என்ற செய்தி சமீபத்தில் வெளியாகியிருக்கிறது. இன்னும் பி. என். ராவ் திட்டம் வேறு சென்னையைத் தமிழர்களிடமிருந்து அபகரிக்கப் பார்க்கிறது. அத்திட்டத்திற்குச் சர்தார் பட்டேலின் ஆதரவு இருப்பதாக திரு ராவ் அவர்கள் சொன்னதாகத் தெரிகிறது. பொறுப்புள்ள தலைவர் பட்டேல்கூட அத்திட்டத்தை ஆதரிப்பதாயிருந்தால் தமிழர்களின் தலைநகரான சென்னையைப் பற்றி நாம் கவலைப்பட வேண்டியிருக்கிறது. சமீபத்தில் சென்னையில் கூடிய ஆந்திர மகா சபையின் நடவடிக்கைகள் தமிழர்களுக்குத் தெரியும். கேரளியர் திருச்சூரில் கூடியதும் மேன்மை தங்கிய கொச்சி மகாராஜா அவர்கள் கேரளியர்களுக்கு வழி காட்டியதும் தமிழர்களுக்குத் தெரியும். கன்னடர்களும் பலமான ஏற்பாடுகள் செய்து வருவதாகச் சொல்லப்படுகிறது.

நம் தமிழர்களைப் பொறுத்தமட்டில் பிரபலத் தலைவர்கள் தமிழ் மாகாணக் கோரிக்கை பற்றி வற்புறுத்திச் சொல்லவோ, தமிழர்களை இது சம்பந்தமாக ஒன்றுபடுத்த முயற்சிகள் செய்யவோ முன்வரவில்லை.

"மற்ற மூவரும் பிரிந்தால் நாம் தனிதானே?" என்று சிலர் கேட்கிறார்கள். மற்ற மூவரும் பிரிவார்கள்; அதைப் பற்றிச் சந்தேகமேயில்லை. ஆனால் ஆந்திரர்கள் பட்டணத்தையும் திருவாங்கூரில் தமிழர்களுக்குச் சொந்தமான பகுதிகளைக் கேரளத்தாரும் எடுத்துக் கொள்ளவும் பார்ப்பார்கள்!

தமிழ்நாட்டிலுள்ள பிரபலத் தலைவர்களெல்லாம் இன, குல, மத, கட்சி வேறுபாடுகளையெல்லாம் மறந்து ஒன்றுபட்டுத் தமிழ் நாட்டின் தலைநகராகிய சென்னையில் ஒரு மகாநாடு நடத்தி, "தமிழ்நாடு தமிழருக்கே!" "சென்னை தமிழருக்கே!" "திருவாங்கூர் நாஞ்சில் நாடு தமிழருக்கே!" என்பதையெல்லாம் உலகுக்கு உறுதியுடன் எடுத்துக் காட்ட வேண்டுமென்று கேட்டுக் கொள்கிறேன்.

வெ. ர. நாகராஜன்.

மயிலாப்பூர், சென்னை
19—4—'47

"கல்கி" ஆசிரியர் அவர்களுக்கு,

"பாரதி மண்டபத்" திருப்பணி பூர்த்தியாவதற்குப் பணம் பலரிடமிருந்து வருவதைக் குறித்து எனக்குப் பொறாமையாக இருக்கிறது! காரணம், "முதலில் நான் கொடுக்கவில்லையே!" என்றுதான். அப்படிக் கொடுத்திருந்தால் முன்போல் இப்போதும் அடியேனுடைய திருநாமம் (நான் வைஷ்ணவன். ஆகையால் 'நாமத்'தைக் கண்டு பயப்பட மாட்டேன்!) முதலில் வந்திருக்கும்!

போனது போகட்டும்! (அதாவது, நான் பிரபல்யம் அடையாததைக் குறித்த பிரலாபம் ஒருபுறம் தனியாயிருக்கட்டும்!) மண்டப நிதிக்கு என்னுடைய காணிக்கையாக ரூபாய் 51—0—0 இத்துடன் அனுப்பியிருக்கிறேன். சென்ற தடவைக்கும் பத்து பங்கு நான் கொடுத்திருப்பதால், முன்னால் நிதிக்குக் கொடுத்தவர்கள் அனைவரும் போட்டி போட்டுக்கொண்டு அவரவர்களுடைய காணிக்கையைப் பன்மடங்காகக் கூட்டி அனுப்பித்து மண்டபத்தை மாளிகையாகச் செய்ய உதவுவார்கள் என்று நம்புகிறேன். இந்தத் தடவை தாங்கள் "போதும், நிதிக்கு அனுப்புவதை நிறுத்துங்கள்!" என்று மட்டும் கட்டளையிடக் கூடாது!

கி. ரகுநாதன்.

புதூர், 20—4—47.

ஐயா,

அகில இந்தியப் பத்திரிகாசிரியர் மகாநாட்டின் தலைவர் ஸ்ரீ தேவதாஸ் காந்தியை—தமிழ்நாட்டுத் தலைவர் மருமகனை—தமிழிலேயே பாராட்டியமைக்குத் தமிழர்களாகிய நாங்கள் தங்களைப் பாராட்டுகிறோம். தங்கள் தமிழ் ஆர்வம் தழைத்து ஓங்கட்டும். பாரதியார் மண்டபத்திற்காகக் கவிஞர் ராமலிங்கம் பிள்ளை தந்துதவியது போல் ரூ. 100தான் அனுப்ப வேண்டுமா? இல்லை, குறைந்தும் அனுப்பலாமா? நான் ரூ. 100 அனுப்பச் சக்தியில்லாதவன். ஆகையால் கொஞ்சமாய் அனுப்பலாமென்றால் உடனே அனுப்புகிறேன்.

கே. சிவசுப்பிரமணியம்.

[தங்கள் சக்திக்குத் தகுந்தபடி ஐந்து ரூபாய் முதல் ஐயாயிரம் ரூபாய் வரையில் அனுப்பலாம். பணம் பெரிதல்ல; இந்த தானத்தில் அன்புதான் பிரதானம். —ஆசிரியர்.]

# லக்ஷ்மியின் கடிதம்



சனிக்கிழமை டிற்பகல் இரண்டு மணிக்கெல்லாம் காரியாலயத்தை விட்டு வீட்டுக்கு வரும்பொழுது மணி இரண்டரை ஆகிவிட்டது. வீடு பூட்டியிருந்தது. அப்பொழுதுதான் ராஜம் சினிமாவுக்குப் போயிருந்தது ஞாபகம் வந்தது. அடுத்த வீட்டுப் பையனைக் கேட்டுச் சாவியை வாங்கிக் கதவைத் திறந்து உடுப்பைக் களைந்து விட்டு நாற்காலியில் உட்கார்ந்தேன்.

எதிரே மேஜையின்மேல் முதல்தரமான காப்பி கொதித்துக் கொண்டிருந்தது. இது சகஜம்தான். ராஜம் எங்கேயாவது வெளியே போவதாக இருந்தால் அன்றைய தினம் காப்பி என்றுமில்லாதபடி அருமையாக இருக்கும்!

காப்பியைக் குடித்து விட்டு எழுத உட்கார்ந்தேன், "நான் மத்தியானம் அடுத்தாத்து அம்மாமியுடன் சினிமாவுக்குப் போகப் போகிறேன். உங்களுக்குக் காப்பி போட்டு 'பிளாஸ்'கில் வைத்து விட்டுப் போகிறேன். நிம்மதியாக உட்கார்ந்து இன்றைய தினம் கண்டிப்பாக நீங்கள் கதை எழுதி முடிக்கவேண்டும். நான் இருந்தால் தானே தொந்தரவு, எழுத முடியவில்லை என்று நொண்டிச் சாக்கு!" என்று காலையிலேயே அவள் கொஞ்சலும் கோபமுமாகச் சொன்னது ஞாபகம் வந்தது.

எழுத உட்கார்ந்தேன். ஏதோ எழுதி எழுதிக் கிழித்துக் குப்பைக் கூடையில் போட்டேன். என் ஞாபகம் முழுவதும் ராஜத்தின்மேல் இருந்தது.

வாஸ்தவம்; அவள் என்னுடன் இருந்தால் என்ன காரணத்தாலோ எழுத முடியவில்லை. அவள் இல்லாது போனால்......? இந்தப் பாழும் கற்பனை அவளையல்லவா தொடர்ந்து ஓடுகிறது!

இந்தச் சமயத்தில், "மாமா, கடிதாசி வந்திருக்கு, உங்களுக்கு!" என்று வாசலில் குரல் கேட்டது.

எழுந்து போய் அந்தக் கடிதத்தை வாங்கிப் பிரித்துப் பார்த்தேன்.

முத்து முத்தான எழுத்தில் கோவையாகப் பதினைந்து தாள்கள். ராஜத்துக்கு அவள் தோழி லக்ஷ்மி எழுதியிருந்தாள்.

பிரித்துப் பார்த்தது குற்றம்தான். ஆனால் அதைப் படிக்க வேண்டும் என்கிற ஆவலை மட்டும் என்னால் அடக்க முடியவில்லை. பதினைந்து பக்கங்கள் சளிப்பில்லாமல் ஒரு பெண்

ப.ராமமூர்த்தி



தன் சிநேகிதிக்கு எழுத வேண்டும் என்றால், அதில் ஏதோ தனிப்பட்ட சுவாரஸ்யம் இருக்கவேண்டுமல்லவா?

ராஜம் வந்தால் தன் கடிதத்தை நான் பார்த்து விட்டேனே என்று கடிந்து கொள்ளுவாள். அந்தக் கடிதத்தில் புருஷர்களுக்குத் தெரிவிக்கக் கூடாத உட்பொருள் ஏதாவது இருக்குமானால் அவள் முகம் வெட்கத்தால் சிவக்கும். அப்பொழுது அவளுடைய இயற்கை அழகு இன்னும் பரிபூரணமடையும். பிறகு .........?

"சரி, என்னதான் எழுதியிருக்கிறது என்பதைப் பார்ப்போமே!" என்று எண்ணியவனாய்க் கடிதத்தை முழுக்க முழுக்கப் படித்துப் பார்த்தேன்.

நான் எதிர்பார்த்தது வீண் போகவில்லை. கடிதம் ரொம்ப ரொம்ப சுவாரஸ்யமாகத்தான் இருந்தது. "கெட்டிக்காரப் பெண்! அவளைக் கல்யாணம் செய்து கொண்டவன் மிகவும் அதிர்ஷ்டசாலிதான். ஆனால் பாவம், அவள் தலையெழுத்து அவளை மூன்றாவது மனைவியாக்கி விட்டது!" என்று நான் லக்ஷ்மியின்மேல் பச்சாத்தாபப் பட்டேன்.

கடிதத்தை ராஜம் வந்தால் கொடுத்து விடலாம் என்று மடித்து வைத்து விட்டு, மறுபடியும் எழுத ஆரம்பித்தேன். பாழும் மனம் புதுக் கதை புனைய மறுத்து விட்டது. மறுபடியும் அந்தக் கடிதத்தையே சுற்றிச் சுற்றி வட்டமிட்டுக் கொண்டிருந்தது.

அப்புறம் எழுதலாம் என்று சாய்வு நாற்காலியில் சாய்ந்து கண்ணயர்ந்தேன்.

அதற்குள் ராஜம் வந்து என்னைத் தட்டி எழுப்பினாள்.

"நன்றாயிருக்கு. நீங்கள் கதை எழுதுகிற லட்சணம்! வாசற் கதவைத் திறந்து போட்டு விட்டுக் கும்பகர்ணன் மாதிரி தூங்குகிறீர்களே!" என்றாள் அவள்.

நான் மெதுவாக எழுந்து, "ராஜீ! உனக்குக் கடிதாசி வந்திருக்கே, பார்த்தாயோ?" என்றேன்.

"ஏதோ, இப்படிக் கொடுங்கள்!" என்று ஆவலுடன் கேட்டாள்.

நான் கடிதத்தை மெதுவாக எடுத்துக் கொடுத்தேன்.

"யார் பிரித்தது?" என்று அவள் கேட்டாள்.

"யார் பிரிப்பார்கள்? யாருக்குப் பிரிக்க உரிமையுண்டோ, அவர்கள்!" என்று நான் சொல்லி வைத்தேன்.

## . . . முதற்பரிசுக்கதை . . .



நல்ல வேளையாக, அவள் என்மீது கோபித்துக் கொள்ளவில்லை. ''கடிதம் இருக்கட்டும்; உங்கள் கதை எங்கே?'' என்று கேட்டு என் மானத்தை வாங்கினாள்.

''அந்தக் கடிதத்திலுள்ள நிஜக் கதை, கற்பனைக் கதைகளை யெல்லாம் தூக்கியடித்துவிடும் போலிருக்கிறது! படித்துத்தான் பாரேன்!'' என்றேன்.

அவள் படிக்க ஆரம்பித்தாள். அந்தக் கடிதந்தான் இது :—

பம்பாய்,
20—8—46

என் உயிருக்கு உயிரான ராஜத்துக்கு, லக்ஷ்மி அன்புடன் எழுதிக் கொண்டது:

உன் கடிதம் கிடைத்தது. நான் என் இரண்டு வருஷங்களாக, நமக்குக் கல்யாணம் ஆனபிறகு, கடிதமே எழுதவில்லை என்று கேட்டிருக்கிறாய். எனக்கு எழுதுவதற்கு என்னடி இருக்கிறது? உன்னைப்போல் சின்னஞ் சிறு இருபது வயது மன்மதனையா நான் கல்யாணம் செய்து கொண்டிருக்கிறேன், எழுதுவதற்கு! என் தலைவிதிதான் உனக்குத் தெரியுமே! ஏழையாய்ப் பிறந்த பெண், அழகாய் இருந்தால் மட்டும் போதுமா? என் கணவருக்கு நான் மூன்றாம் தாரம். அப்படியிருக்க உனக்கு நான் எதைப் பற்றி எழுத முடியும்? இருந்தாலும், என் மனத்தில் இந்த இரண்டு வருஷங்களாக அடக்கி வைத்திருந்த விஷயங்களை இன்றைய தினம் எழுதி விடுகிறேன். பொறுமையுடன் படித்துவிட்டு உடனே இதைக் கொளுத்தி விடு. நமக்குள் இருக்க வேண்டிய ரகசியம். வேறு யாராவது பார்த்துவிடப் போகிறார்கள்!

போன வருஷம் அவர் சென்னைக்கு வந்து, தனிக் குடித்தனம் நடத்துவதற்காக என்னைப் பம்பாய்க்கு அழைத்துப் போனது உனக்குத் தெரிந்த விஷயம். நல்ல வேளை, என் அதிர்ஷ்டவசமாக அவருக்கு மூத்தாள் குழந்தை எதுவும் இல்லை. எங்கள் இருவருடைய அன்யோன்ய தாம்பத்ய வாழ்க்கையைக் கெடுக்க உயிருள்ள வேறு யாரும் பம்பாயில் இல்லை.

ஆனால் என்னுடைய இன்ப வாழ்க்கையைத் துன்பமென்னும் வலை வீசிப் பிடிக்க என்னுடைய மனமே காரணமாக இருந்தது. என்ன இருந்தாலும் பெண் வர்க்கமாகிய நமக்குப் பல சமயங்களில் நமது மனமும் நாக்குமே வைரியாக வந்து முளைக்கின்றன. சபலம் தூண்டிவிட்ட சந்தேகப் பேய் மனத்தில் புகுந்து ஆட்டிவிடும்படி நாம் இடம் கொடுத்து விடுகிறோம். புருஷர்களிடம் எவ்வளவு கெட்ட குணங்கள் இருந்தாலும் சில நல்ல குணங்களும் இருக்கத்தான் செய்கின்றன. அந்த நல்ல குணங்கள் கெட்ட குணங்களை வெளிப்படாமலிருக்கவும் உதவுகின்றன. பெண்களாகிய நமக்கு எந்தச் சமயத்திலும் அவர்களுடைய நல்ல குணங்கள் தெரிவதில்லை. தெரிந்தால்கூட பூதக் கண்ணாடியாகிய நமது மனம் அவர்களுடைய கெட்ட குணங்களை ஆயிரம் மடங்கு பெரிதாக்கிப் பார்த்து விடுகிறது. நமது நாக்கு வரம்பில்லாமல் பேசிவிடுகிறது. இதெல்லாம் எதற்காக எழுதுகிறேன் என்று உனக்குப் புரியாது. என் கடிதத்தை முழுவதும் படித்தாயானால் புரிந்துவிடும்.

பம்பாயில் என் புருஷர் வாடகைக்கு வைத்துக் கொண்டிருந்த இரண்டு அறைகள் மிகவும் அழகாய் இருந்தன. பளிங்குக் கல் தரை பளபள வென்று மின்னும் ஒரு சயன அறை; அதை அடுத்

துச் சமையலறை. எனக்கு மிகவும் பிடித்திருந்தது.

சம்சாரம் தொடங்க அத்யாவசியமான எல்லாச் சாமான்களையும் அவர் வாங்கி வைத்திருந்தார். கட்டில், மெத்தை, நாற்காலி, மேஜை முதலியவற்றை யெல்லாம் வேலைக்காரன் தட்டி வைத்திருந்தான்.

இவற்றையெல்லாம் ஒரு சுற்றுப் பார்த்து விட்டு, அவர் ஹோட்டலிலிருந்து கொண்டு வந்த சாப்பாட்டைச் சாப்பிட்ட பிறகு ஆயாசம் தீரப் படுத்துக் கொண்டேன்.

அவர் எங்கேயோ வெளியே போய் வருவதற்காக உடை யணிந்துகொண்டு போய் விட்டார்.

நான் படுத்தபடியே தலை நிமிர்ந்து பார்த்தேன். சுவரில் நான் கண்ட காட்சி என் உள்ளத்தை உலுக்கியது. வேறு ஒன்றும் இல்லை; இரண்டு படங்கள். இரண்டும் பெண்களின் படம்.

நான் கட்டிலின்மேல் ஏறி அந்த இரண்டு படங்களையும் கழற்றிப் பார்த்தேன்.

யாருடைய உதவியு மின்றியே அந்த இரண்டு படங்களில் உள்ளவர்களும் யார், யார் என்று எனக்குத் தெரிந்து விட்டது!

ஆமாம், அவர்கள் என் மூத்தாள்கள்!

ஒவ்வொரு படத்தையும் ஊர்ந்து நிமிஷங்கள் ஊன்றிப் பார்த்தேன்.

முதலில் நான் பார்த்த படம் அவருடைய முதல் மனைவியினுடையது என்று நினைத்தேன். உருண்டை முகம்; குறுகுறு வென்று பார்ப்பவரை மயக்கும் நீண்ட கண்கள்; ஒழுங்காய்ப் படிந்திருந்த தலைமயிர்; அழகான மூக்கு; சின்னஞ் சிறுத்தவாய். லட்சணமாகக் குடும்ப ஸ்திரீகளுக்கு வேண்டிய அடக்கத்துடன் இருந்தாள். எனக்கு அவளை ரொம்பப் பிடித்திருந்தது.

இரண்டாவது படத்தில் இருந்தவள், அப்பப்பா! அவளைப் பம்பரமாக ஆட்டி வைத்திருக்க வேண்டும். அவளுடைய ஸ்டைலும், உடையும் அப்படியே சினிமாக்காரி மாதிரி இருந்தது.

அவள் பக்கவாட்டில் பார்த்துக் கொண்டிருந்தாள். காதில் நீண்ட லோலாக்கு; சுருட்டை மயிர்; பெரிய கண்கள்; எடுப்பான மூக்கு; முத்துப்போல் பற்கள்; வாயைப் பிளந்து சிரித்த வண்ணம் இருந்தாள். கையில் ஒரு கொத்துப் புஷ்பங்களையும் வைத்துக் கொண்டிருந்தாள்.

நான் சிறிது நேரம் அந்த இரண்டு போட்டோக்களையும் ஒப்பிட்டுப் பார்த்துத் தலையணைக்கடியில் மறைத்து வைத்துக் கொண்டேன்.

படுத்தவுடனே தூக்கம் வருகிற சமயம் அதுவல்ல; வேறு. உடம்பு என்னதான் அலுப்படைந்திருந்தாலும் மனத்தில் சந்தேகமும் யோசனையும் தொடர்ந்து வந்தால் தூக்கம் எப்படி வரும்?

என் மனம் அந்த இரண்டு போட்டோக்களைச் சுற்றிச் சுற்றி வட்டமிட்டுக் கொண்டிருந்தது. அவர்கள் இருவரிடமும் என் புருஷர் எப்படிப் பழகி யிருப்பார் என்பதை நினைத்துப் பார்த்தேன். அதன் பலனாக எனக்கு ஆண் வர்க்கத்தினிடமே ஆத்திரமும் வெறுப்பும்தான் ஏற்பட்டன.

அவருக்கு மூத்த மனைவிகள் இரண்டு பேரின் மேல் எத்தனை ஆசை இருந்திருக்கும்? எவ்வளவு கொஞ்சி விளையாடி இருப்பார்? உண்மையான அன்பு யார்மேல் இருந்திருக்கும்? முதல் மனைவியின் பேரிலா, அல்லது இரண்டாவது மனைவியான அந்தப் பகட்டுச் சாகசக்காரியிடமா? இல்லை, இப்பொழுது வந்திருக்கும் என்மீதிலா?

எனக்கு இந்தக் கேள்விதான் எழுந்தது. அதற்குப் பதில்......? என் மனசுக்குத்



தீர்மானமான எந்தப் பதிலும் கிடைக்கவில்லை. யோசிக்க யோசிக்க எனக்குச் சந்தேகமும் துக்கமும்தான் மிஞ்சியது.

ஆம், ஆண்களே மிகவும் சுயநலம் பிடித்தவர்கள். அவர்களுடைய ஆசையெல்லாம் மிருகத்தனமானதுதான். இல்லாவிட்டால் ஒரு மனைவியுடன் இன்ப வாழ்க்கை நடத்திவிட்டு, அவள் இறந்த பிறகு மறுமணம் செய்துகொள்ள அவர்கள் எப்படி ஒப்புவார்கள்? கல்யாணம் பண்ணிக் கொண்டாலே அவர்களுக்குப் புலியின் குணம் வந்துவிடுகிறது. மனித ரத்தத்தை ருசி கண்ட புலி எப்பொழுதும் நாக்கைத் நீட்டிக்கொண்டு மனிதனுக்காகவே அலையுமாம். அதுமாதிரி ஒருதரம் கல்யாணம் செய்து கொண்டவன் பிறகு பிரம்மசாரியாயிருப்பது குதிரைக் கொம்புதான். எப்படியோ ஒன்றுமறியாத நம்போன்ற இளம் பெண்களை ஆசை வார்த்தை காட்டி மோசம் செய்து கழுத்தில் தாலிக் கயிற்றைக் கட்டி அடிமைப் படுத்தி விடுகிறார்கள். பிறகு நமக்கு என்ன சுதந்திரம் இருக்கிறது, வாழ்க்கையில்?

என் புருஷர்! — இப்பொழுது என் புருஷர்தான் இவர். இதற்குமுன் இந்தச் சொந்தம் கொண்டாடி ஏமாந்த பெண்கள் இரண்டு பேர்; நான் மூன்றாவது!

அவர் வந்தால் என்ன சொல்லப் போகிறார்? நாவல்களில் வருவதுபோல் 'என் கண்ணே, முத்தே!' என்று வஞ்சகமாக இச்சகம் பேசுவார். பிறகு 'நீதான் என் உயிர். உன்னைத் தவிர இந்த உலகத்தில் எனக்கு யார் இருக்கிறார்கள்? உன் அன்பே என் இன்பம்' என்று தம் சுயநலத்திக்குத் தூபம் போடுவார்.

இதேமாதிரி பாடம் படித்து நாடகமாடுவது புருஷர்களுக்குப் புதிதல்ல; அது அவர்கள் ரத்தத்திலேயே ஊறி யிருக்கிறது. அதுவும் என் புருஷருக்கோ பிறவிக் குணத்துடன் அநுபவமும் சேர்ந்திருக்கிறது. கேட்பானேன்!

இப்படி என் மனம் எண்ணாததெல்லாம் எண்ணிப் புண்ணாகப் போய்க் கொண்டிருந்தது. அழுகை அடக்க முடியாமல் பீறிட்டுக் கொண்டு வந்தது.

'ஏன் கல்யாணம் பண்ணிக் கொண்டோம்?' என்று ஒரே வெறுப்பாகத் தோன்றியது.

இருக்கட்டும். அவரே வரட்டும். நேரிலேயே கேட்டுவிடுவோம். என்னைப் பற்றி அவர் என்ன நினைக்கிறார்? என்மீது உண்மையான அன்பு அவருக்கு இருக்கிறதா? அல்லது வெறும் பாசாங்குதானா?—என்பதை அறியவேண்டும் என்ற எண்ணம் தலைதூக்கி விரித்தாடிற்று.

நான் கேட்டால் என்ன பதில் சொல்லப் போகிறார்? அவருக்கு மனப் பாடமான இச்சக வார்த்தைகள்தானே! ஹூம்...... அதை யார் சட்டை செய்யப்போகிறார்கள்? அவருடைய கொஞ்சலுக்கும் கெஞ்சலுக்கும் மசியக் கூடாது. உண்மையில் அவர் யோக்கியராக இருந்தால் ரகசியம் என்று என் எதையும் மறைக்க வேண்டும்? அப்படி மறைத்துப் பூடகமாகப் பேசினால் நானும் உஷாராக இருந்து விடுகிறேன். அல்லாமல் உண்மையைச் சொல்லி, 'நான் உன்னைக் கல்யாணம் செய்து கொண்டது அன்பினால் அல்ல; எனக்குத் தனிமையின் கொடுமையைத் தணிக்க ஒரு பெண் வேண்டியிருந்தது. நீ அகப்பட்டாய்!' என்று அவர் ஒப்புக் கொண்டால், பிறகு என் தலையெழுத்து விட்ட வழி யாகட்டும்.

இப்படித் தீர்மானித்துக் கொண்டு கண்களை இறுக மூடித் தூங்க முயற்சி செய்தேன். கண்களில் தங்கி யிருந்த நீர்த் துளிகள் தலையணையில் விழுந்ததுதான் மிச்சம். தூக்கம் எங்கே வருகிறது?

✶

அவர் வந்தார். என்னைத் தட்டி எழுப்பினார்.

"ஏன் கண்கள் சிவந்திருக்கின்றன? அழுதாயா, என்ன?" என்று மிகப் பரிவுடன் கேட்டார்.

"ஒன்றுமில்லை. ரயிலில் வந்தபோது கரித் துண்டு விழுந்துவிட்டது!" என்று மழுப்பினேன்.

அவர் கட்டிலின்மேல் உட்கார்ந்து தலையணைமேல் சாய்ந்தார். பாவம், ஊர் சுற்றி விட்டு வந்த அலுப்பு!

நான் எழுந்து நின்றேன்.

"பரவாயில்லை, உட்காரு! எனக்கு மரியாதை காட்ட வேண்டுமென்றால், கால் வலிக்கச் சதா நின்று கொண்டிருக்க வேண்டும் என்று அர்த்தமில்லை!" என்று சொல்லிச் சிரித்தார்.

எனக்கும் கொஞ்சம் சிரிப்பு வந்தது. நான் மெதுவாக அதை அடக்கிக் கொண்டே, பாபா வென்று சமையல் அறைக்குப் போய்த் தரையில் உட்கார்ந்து

கொண்டேன். ராஜி, நான் என்னதைச் சொல்வேன்? — அவர் வந்தால் அவரைக் கேட்கவேண்டுமென்று நான் தயார் செய்து வைத்திருந்த கேள்விகளெல்லாம் என் மனத்தில் எங்கேயோ போய் ஒளிந்து கொண்டன! அவரை நேரில் பார்த்ததும் எனக்கு அவருடன் பேசவே தைரியம் வரவில்லை. பெண்களே மிகவும் கோழைகள்!

அவர், 'அழுதாயா என்ன?' என்று கேட்டபோது, அவர் குரலில் தொனித்த அன்பும் ஆசையும் என் உள்ளத்தைச் சுருக்கென்று குத்தின. அவ்வளவு நிதானமாக அவர் கேட்ட கேள்விக்கு எதிர்க் கேள்வி போடுவது எனக்குச் சுலபமாகத் தோன்றவில்லை. என்னையும் அறியாமல் என் இதயம் படபட வென்று அடித்துக் கொண்டது. உதடுகள் துடித்தன. கோபத்தினால் அல்ல; பயத்தினாலும் அல்ல; என் மனத்தில் என்ன உணர்ச்சி ஏற்பட்டதோ அதை அறிய முடியவில்லை.

எங்கே தலையணைக்கு அடியில் இருந்த போட்டோவைப் பார்த்துவிடப் போகிறாரோ என்று எனக்கு அச்சமாகத் தான் இருந்தது.

அவர் எழுந்து வந்தார். "லக்ஷ்மி!" என்று கூப்பிட்டார்.

"என்?" என்று கேட்டேன். என்னுடைய பதில் அவர் காதில் விழுந்ததோ இல்லையோ?

"எழுந்து வா! மார்க்கெட்டுக்குப் போய் ராத்திரி சமையலுக்கு வேண்டிய காய்கறிகள் வாங்கிக் கொண்டு வரலாம். உனக்கும் பல இடங்களைக் காண்பிக்கிறேன்."

"நீங்கள் மட்டும் போய்விட்டு வாருங்கள். நான் எதற்கு?" என்றேன்.

"சும்மா போய் விட்டு வருவோம், வா! உனக்கு அலுப்பாக இருந்தால் வேண்டாம்!" என்றார்.

அதற்குமேல் நான் அவருடன் வாதாட விரும்பவில்லை. அவரைத் தொடர்ந்து மார்க்கெட்டுக்குச் சென்றேன்.

பம்பாயில் காய்கறிகள் விற்கிற அதிசயத்தைப் பார்த்த எனக்கு ஒரே ஆச்சரியமாயிருந்தது. புடலங்காய், பூசனிக்காய், முருங்கைக் காய் இவற்றைக்கூடத் தராசில் நிறுத்துக் கொடுத்தது எனக்கு நூதனமாக இருந்தது.

இதற்குமேல் விசித்திரமான ஒரு சம்பவம் பிறகு நடந்தது. அதைக் கேட்டால் நீ ஸ்தம்பித்துப் போய் விடுவாய். சொல்கிறேன், கேள்.

காய்கறிகளை வாங்கிக் கொண்டு இருவரும் வீடு திரும்பினோம்.

பின்னாலிருந்து யாரோ, "மாப்பிள்ளை, மாப்பிள்ளை!" என்று கூப்பிட்ட குரல் கேட்டது.

"இது என்ன, ஆச்சரியம்! ஒரு வேளை என் தகப்பனார்தான் வந்து விட்டாரோ?" என்று எண்ணி நான் திரும்பிப் பார்த்தேன்.

அவரும் திரும்பிப் பார்த்தார்!

பின்னால் வந்த மனிதரைப் பார்த்ததும் அவர் முகம் வெளிறிட்டு விட்டது.

நான் கண்ட காட்சி என்னை ஒரே உலுக்காக உலுக்கி நாலு முழ உயரம் தூக்கிப் போட்டது. ராஜி, நான் எப்படியடி எழுதுவேன்? அதை நினைத்தாலே என் மனம் கலங்குகிறது; கை எழுத மறுக்கிறது; மனதைத் திடப்படுத்திக் கொண்டு எழுதுகிறேன்.

புதிதாக வந்த அவருக்குச் சுமார் ஐம்பது வயதிருக்கும். அவருக்கு முன்னே ஒரு கூலிக்காரன் ஒரு பெட்டி, படுக்கை, தூக்குக் கூடை இவைகளைச் சுமந்து கொண்டு வந்தான்.

பின்னால் யார் வந்து கொண்டிருந்தது, தெரியுமா?

அவள்! நான் யாருடைய படத்தைச் சில நாழிகைகளுக்கு முன்னால் பார்த்து அவஸ்தைப் பட்டேனோ, அந்தப் பெண்! என் புருஷரின் இரண்டாவது மனைவி! போதாக்குறைக்கு அவள் கையில் சின்னஞ்சிறு கைக் குழந்தை ஒன்று!

நான் மூர்ச்சித்து விழாமல் வீடு வந்து சேர்ந்தது பகவான் புண்ணியம்தான்!

என் தலை சுற்றியது; மனம் மருண்டது; கண்கள் இருண்டன; உலகமே சுழன்றது.

என்னையுமறியாமல் சமையல் அறையில் வந்து படுத்தேன். ஒரே மயக்கமாக இருந்தது, எனக்கு. தூக்கமு மில்லாமல் விழிப்பு மில்லாத ஒரு விசித்திர நிலைமையில் நான் கிடந்தேன்.

மறுபடியும் சமாளித்துக் கொண்டு மெதுவாக எழுந்து நின்று சுவரைப் பிடித்த படியே படுக்கை அறைக்குள் எட்டிப் பார்த்தேன். என் புருஷரைக் காணோம்; அவரை 'மாப்பிள்ளை' என்று அழைத்த அவருடைய மாமனாரையும் காணோம்.

அவள்......?

என் சக்களத்தி—யாரை நான் இறந்து போய் விட்டாள் என்று அறிந்து, அவளுக்காக நான் பச்சாத்தாபப் பட்டுக் கொண்டிருந்தேனோ, அவள் சாவதானமாக உட்கார்ந்து, மடியில் தன் குழந்தையைப் படுக்க வைத்துக் கொண்டு, அதைத் தட்டித் தூங்க வைத்துக் கொண்டிருந்தாள்!

எனக்கு அறைக்குள் நுழையப் போதிய தைரியம் இல்லை. அவர்கள் எங்கே போயிருக்கக் கூடும் என்று யோசனை செய்து கொண்டிருந்தேன்.

அவள் என்னைக் கண்டதும், "ஏண்டி லக்ஷ்மி, இங்கே வா!" என்று எனக்கு வெகு நாள் பழக்கப்பட்டவளைப் போல் அதிகாரத்துடன் கூப்பிட்டாள்.

அவள் குரலைக் கேட்டு எனக்குக் குலை நடுக்கம் கண்டு விட்டது.

மறுபடியும் "வாயேண்டி, இங்கே! என்ன பயம்? நான் என்ன பேயா, பிசாசா? நான் தொலைந்து போய்விட்டேன் என்று சந்தோஷமாகச் சம்சாரம் பண்ண வந்து விட்டாயா?" என்று சொல்லிக்கொண்டே, குழந்தையைத் தரையில் விட்டுவிட்டு என்னை நோக்கிப் பாபாவென்று வந்தாள்.

பயத்தினால் என் தேகம் பூராவும் வெடவெடவென்று நடுங்கிற்று. அதற்குமேல் அவள் என்ன செய்தாள், தெரியுமா?

நேரே என்னிடம் வந்து, "மோசக்காரி! அவருக்கு உயிருடன் நான் இருக்கும் போது, நீ ஒருத்தி எதற்காக வந்து சேர்ந்



தாய்? வெட்கங் கெட்ட சிறுக்கி!" என்று என் கழுத்தைப் பிடித்து நெரித்தாள்.

நான் "ஐயோ, ஐயோ!" என்று கதறி விட்டேன்.

இதற்குள் கதவைத் திறந்து கொண்டு அவர் வந்தார். வந்தவர், அவள் கையைப் பிடித்துத் தள்ளி, அவள்...... அப்பப்பா! எனக்கு எழுதக்கூடக் கை கூசுகிறது. அவளுடைய கழுத்தில் இரண்டு கைகளையும் வைத்து......

நான், "வேண்டாம், வேண்டாம்! அவளை விடுங்கள். என் தலையெழுத்துப்படி நடக்கட்டும்......!" என்று அலறினேன்.

அவர் விடவில்லை; கையை இறுக்கினார். அவளுடைய கண்கள் பயங்கரமாக விழித்தன. தரையில் கிடந்த குழந்தை திடீரென்று 'வீல்' என்று கத்த ஆரம்பித்தது. நான் என் கண்களைக் கையினால் மூடிக்கொண்டு என்னையும் மறந்து "அட, பாவி!" என்று கத்தினேன்.

★

"லக்ஷ்மி, லக்ஷ்மி!" என்று அவருடைய குரல் கேட்டது. நான் திடுக்கிட்டுப் படுக்கையை விட்டு எழுந்து உட்கார்ந்தேன்.

"ஏன் கத்தினாய்? ஏதாவது கனவு கண்டாயா?" என்று கேட்டார்.

அப்பாடி! எனக்கு உயிர் வந்தது. நான் கண்டது பூராவும் கனவுதான்; நல்ல காலமாக நிஜமில்லை! இருந்தாலும் என் உடம்பு பூராவும் குப்பென்று வியர்த்து விட்டது; கண்ணைக் கசக்கிக் கொண்டேன்.

"என்ன கனவு கண்டாய்? ஏதோ, சொல்லு பார்க்கலாம். பயம் என்ன, நான் இருக்கும்போது! இப்போதுதான் வந்தேன், வெளியிலிருந்து!" என்றார்.

பயத்துடன் என்னை வெட்கமும் சூழ்ந்து கொண்டது. எல்லாம் அந்தப் போட்டோவைப் பார்த்ததனால்தான்!

நடந்ததையும், நான் கண்ட கனவையும் அவரிடம் சொல்ல எனக்கு என்ன காரணத்தாலோ தைரியம் வரவில்லை.

"ஒன்றுமில்லை" என்று எழுந்திருந்து போக முயன்றேன்.

அவர் என்னை விடவில்லை; கட்டாயப்படுத்திப் படுக்க வைத்து விட்டார்.

பிறகு தம் சட்டையைக் கழற்றி மாட்டினார். அவர் சட்டையை மாட்டும்பொழுது தலை நிமிர்ந்து சுவரைப் பார்த்தார். எதற்காகப் பார்க்கிறார் என்பது எனக்குப் புரிந்து விட்டது. ஆனால் தைரியமாகப் போட்டோவை அவரிடம் எடுத்துக் கொடுக்க நான் முன் வரவில்லை.

'ஹூம்' என்று பெருமூச்சு விட்டுக் கொண்டே மறுபடி என் அருகில் வந்து உட்கார்ந்தார்.

நான் மெதுவாக, "என்ன?" என்று கேட்டேன்.

"ஒன்றுமில்லை" என்று சொல்லிவிட்டு மறுபடியும் பெருமூச்சு விட்டார்.

குற்றமுள்ள என்னுடைய நெஞ்சு குறுகுறுத்தது. சிறிது நேரம் பேசாமல் இருந்தேன். பிறகு அவரிடம் போட்டோவை எடுத்துக் கொடுக்க எண்ணி, "போட்டோ தானே! நான்தான் எடுத்துப் பார்த்தேன். இதோ!" என்று தலையணையைத் தூக்கிப் போட்டோவை எடுத்து அவரிடம் கொடுத்தேன்.

அவர் அவை இரண்டையும் உற்றுப் பார்த்தார். என் மனத்தில் எழும்பிய புயலைப்போல் அவர் மனத்திலும் சிந்தனை அலைகள் வீசத்தான் செய்தன.

அவருடைய சோபை இழந்த முகத்தையும், அவர் விட்ட பெருமூச்சையும் கண்ட எனக்கே அவரிடம் இரக்கம் ஏற்பட்டது. ஆறும் புண்ணைக் கீறிவிட்டு வேடிக்கை பார்ப்பது நியாயமா?

மெதுவாக அவர் எழுந்து போட்டோக்களை மறுபடியும் ஆணியில் மாட்டினார்.

நான் அதை ஏறிட்டுப் பார்த்த பொழுது சிறிது நேரத்துக்கு முன்னால் கண்ட அர்த்தமில்லாத அசட்டுப் பயங்கரக் கனவின் நினைவுதான் முன் வந்து நின்றது.

"வேண்டாம், அந்தப் போட்டோக்களை எடுத்து உள்ளே வைத்து விடுங்கள்!" என்று சொல்லி விட்டேன்.

அதற்குப் பதிலாக அவர் "ஏன்?" என்று என்னைக் கேட்டுவிட்டுப் பார்த்த பார்வை அர்த்த புஷ்டியுள்ளதாயிருந்தது.

அந்தக் கேள்விக்குப் பதில் சொல்ல வேண்டுமென்று நான் துடித்தேன். என் மனத்தில் எழுந்த உணர்ச்சிகளையும், சந்தேகத்தையும், நான் கண்ட கனவையும் சொல்லிவிட வேண்டும் என்கிற ஆவல் மீறி வந்தது.

"அவை என் கண்ணுக்கெதிரில் இருக்க வேண்டும்? உங்களுக்குப் பழைய ஞாபகங்களைக் கிளறிவிட்டுச் சஞ்சலமுண்டாக்காதா? அதனால்தான்!" என்றேன்.

"படங்களை எடுத்துப் பெட்டியில் மறைத்து வைத்து விட்டால் என் மனத்தி

னுன்ன ஞாபகங்களும் மறைந்து விடுமா, என்ன?" என்று கேட்டார்.

'சுரீர்' என்று சாட்டையால் அடிப்பது போல் இந்தக் கேள்வி என் காதில் விழுந்தது.

'ஆம், அவர் நியாயவான். உன்னொன்று வைத்துப் புறம் ஒன்று பேசவில்லை. அவர் மனம் தம் இரண்டு மனைவிகளின் நினைவையும் மறந்து விடவில்லை. இடுப்பில் பாறுங் கல்லைக் கட்டிக்கொண்டு நீந்தத் தண்ணீரில் இறங்குவதுபோல், அந்தச் சோக நினைவுகள் மனத்தைச் சூழ அவர் என்னுடன் வாழ்க்கை தொடங்குகிறார்' என்று என் மனத்திற்குத் தெளிவாகத் தெரிந்து விட்டது.

போட்டோவை மறைத்தாலும் அவர் மனம் தெளியாது. ஒரு வேளை பழைய ஞாபகங்கள் அதனால் அதிகமானாலும் ஆகும். இப்படியாகச் சிந்தித்து, "அப்படியானால் அங்கேயே இருக்கட்டும்!" என்று கூறினேன்.

அவர் என்ன நினைத்தாரோ, என்னமோ—சிறிது நேரம் போட்டோக்களைக் கையில் எடுத்துப் பார்த்துக் கொண்டிருந்தார். பிறகு மறுபடியும் அவற்றை ஆணியில்மாட்டி விட்டு என் அருகில் வந்து அமர்ந்தார்.

"லக்ஷ்மி, என்மீது கோபமா?" என்று கேட்டார்.

"உங்கள் மீதா? எதற்காகக் கோபித்துக் கொள்ள வேண்டும்?"

"போட்டோவை உன்னை எடுத்து வைக்கக் கூடாது என்று சொன்னேனே, அதனால்?"

"அதனால் என்ன? உண்மையைத்தானே நீங்கள் சொன்னீர்கள்? அதை மறைத்து விட்டால் மட்டும் உங்கள் ஞாபகங்கள் மறைந்துவிடுமா, என்ன?"

"லக்ஷ்மி! அவர்கள் இரண்டு பேரும் எனக்கு உயிர் போன்றவர்கள். மூத்தாள் போன துக்கத்தை ஆற்றிப் புத்துயிர் ஊட்டினள் என் லலிதா. பாழும் தெய்வம் சதி செய்து விட்டது. என் லலிதாவும் பிரசவ வேதனையில் உயிர் நீத்தாள். இப்போது என் வாழ்க்கைக்குத் துணையாக உன்னைக் கல்யாணம் செய்து கொண்டிருக்கிறேன். என்னுடைய துக்கத்தை ஆற்றுவது உன் கடமையல்லவா? அவர்கள் இரண்டு பேரும் வகித்த ஸ்தானத்தை நீயும் நன்றாய் நிர்வகிக்க வேண்டும்" என்று சொன்னார். அவர் நாத் தழுதழுத்தது; கண்கள் இரண்டும் கண்ணீரினால் நிறைந்தன.

என்னையும் மீறி எனக்கு அழுகை வந்து விட்டது. அவருடைய வார்த்தைகள் அனைத்தும் சத்தியம். அவர் என்னிடம் ஒன்றையும் மறைக்கவில்லை. தமது இரண்டு மனைவிகள் இறந்த துக்கத்தை ஆற்றிக் கொள்ளவே என்னைக் கைபிடித்திருக்கிறார். அவருக்கு ஏற்றபடியல்லவா நான் நடந்து கொள்ள வேண்டும்? கேவலம், சபலத்தினால் அவர் மீது வீண் சந்தேகம் கொண்டேன். என்னுடைய சபலத்தைச் சிறிதாவது தியாகம் செய்து அவர் மனப் புண்ணை ஆற்ற வேண்டும். அது என் கடமை. அதை எப்படிச் செய்ய வேண்டும்? ஒரு நாளில் அவரது பழைய ஞாபகங்களை விரட்டிவிட முடியுமா? என்னுடன் அவர் கொஞ்சிக் குலாவ வேண்டும் என்பதற்காக, அவர் இறந்துபோன தமது இல்லாள் இரண்டு பேருக்கும் நினைத்த மாத்திரத்தில் துரோகம் செய்ய வேண்டுமா? இல்லை, இல்லை. காலம் என்னும் காற்று அவரது புண்ணைத் தானாக ஆற்றிவிடும். ஆற்று வெள்ளத்துடன் சேர்ந்து நீந்தித்தான் கரையேற வேண்டும். க்ஷணத்தில் கரை சேர வேண்டும் என்று ஆசைப்பட்டுக் குறுக்கே பாய்ந்தால் மூழ்க வேண்டியது தான்!

என்னையும் மறந்து நான் அவர் மடியில் சாய்ந்தேன். "நான் உங்கள் அடிமை. நீங்களே எனக்குக் கதி! உங்கள் இஷ்டத்துக்கு மாறாக நான் ஒன்றும் செய்ய மாட்டேன். அவர்கள் இரண்டு பேருக்கும் அளித்த அன்பை எனக்கும் அளித்தால் போதும்!" என்று சொன்னேன்.

"அதில் என்ன சந்தேகம்? இதோ, என்னைப் பார்!" என்று அவர் என் தலையை நிமிர்த்தினார்.

உண்மையில் அன்றே நான் அவருடைய அடிமையாகி விட்டேன்!

இப்போது என் மனத்தில் அவ்வப்போது கொஞ்சம் சந்தேகம் எழுந்தாலும், அது என் இன்ப வாழ்க்கைக்குக் குறுக்கே நிற்பதில்லை. நான் அவருக்கு மூன்றாம் தாரம் என்கிற குறைதான் இருக்கிறது. மற்றபடி நான் சந்தோஷமாகவே இருக்கிறேன்.

உடனே உன் அபிப்பிராயத்தைத் தெரிவித்து எனக்குப் பதில் போடவும்.

உன் பிராண சிநேகிதி,
லக்ஷ்மி.

# ஸ்டோக்கர்

ஆலைச் சூளை அல்லது நீராவி எஞ்ஜின் பாய்லரில் ஸ்டோக்கர்கள் கரண்டி கரண்டியாக நிலக்கரியைக் கொட்டி தீ கெடாமல் எரியவிட்டுக் கொண்டிருப்பதை நீங்கள் எப்பொழுதாவது பார்த்திருக்கிறீர்களா? அவர்கள் என்ன ஓயா உழைப்பு உழைக்கிறார்கள்! ஆனால் அவர்களுடைய உழைப்பும் வியர்வையும் வீணல்லவே. கைத்தொழில், போக்கு வரவுச் சகடங்களை ஓயாமல் ஓடிக்கொண்டிருக்கச் செய்யும் அதி முக்கியமும், தேவையுமான சங்கிலி வளையங்களன்றோ அவர்கள்!

அதைப்போலவே வாழ்க்கைச் சகடத்திற்கும் அதி முக்கியமும், தேவையுமான வளையங்களுண்டு. அவற்றி லொன்று தேகாரோக்கியமும் அதன் சம்ரக்ஷணமும். தேக பரிசுத்தத்தை வற்புறுத்தி அழுக்கையும் நோயையுமகற்றுவதே ஹமாம் நிர்வகிக்கும் வேலை.






# ஹமாம்

பாரத நாட்டு மக்களின் மனத்திற்குப் பிடித்த சோப்பு




டாம்கோ விற்பனை இலாகா
19-A, வாணியர் தெரு
த. பெ. நெ. 31, மதராஸ்

தி டாடா ஆயில் மில்ஸ் கம்பெனி லிமிடெட்




# "ஓவல்டின் தினந்தோறும் லக்ஷக்கணக்கான குடும்பங்களுக்கு ஆரோக்கியத்தை கொடுத்துக் கொண்டிருக்கிறது."

இங்கிலாந்திலும், பர்மாவிலும், இலங்கையிலும், இன்னும் உலகில் அநேக இடங்களிலும் கணக்கிலடங்காத குடும்பங்களில் "ஓவல்டின்" தேகத்துக்கு வளர்ச்சி கொடுத்து வலிவும் வீர்ய சக்தியும் குடும்பத்திலுள்ள ஒவ்வொருவருக்கும் அளிக்க வல்லது என்று நிரூபிக்கப்பட்டிருப்பதால் தினந்தோறும் தவறாமல் உபயோகிக்கப்பட்டு வருகிறது.

வயது முதிர்ந்தவர்களும், குழந்தைகளும், அதன் ருசிகரமான சுவை மணத்தை விரும்புவதுடன், "ஓவல்டின்" ஏராளமாக அளிக்கும் பூர்ண ஆகார சத்துக்களினால் ஆரோக்கிய வன்மை அடைகிறார்கள். எளிதில் ஜீரணிக்கவும், உடம்பில் சேரவும் வல்ல இந்த சத்துள்ள உணவானது, இயற்கை பானிக் கலவைகள், பழுத்த பார்லி மால்ட், புதிய ஏடுடன்கூடிய பசுவின் பால், மதிப்புள்ள இயற்கை விட்டமின்கள், இன்னும் இதர மூல ஆகார சத்துக்களைக் கொண்டு தயாரிக்கப்படுகின்றது.

உங்கள் குடும்பத்தில் தினசரி "ஓவல்டின்" உபயோகிக்க தவறாமல் விரும்புவதுடன், போலிகளை விலக்குவதில் ஜாக்கிரதையாயிருங்கள். "ஓவல்டின்"னையே கேட்டு வாங்குங்கள்.

**எல்லா மருந்து வியாபாரிகளிடமும், ஸ்டோர்களிலும் கிடைக்கும்**

**விநியோகஸ்தர்கள்:**
**கிரஹாம்ஸ் ட்ரேடிங் கோ (இந்தியா) லிட்., த. பெ. நெ. 1205, மதராஸ்: பம்பாயிலும், கராச்சி கல்கத்தாவிலும்:**

## 'ஓவல்டின்'

OVALTINE பலவிருத்தி ஆகார பானம்

**தி இங்கிலிஷ் & ஸ்காட்டிஷ் ஜாயிண்ட் கோவாப்பரேடிவ் ஹோல்சேல் சொஸைடி லிட்., கள்ளிக்கோட்டை (மலபார் கோஸ்டுக்கு)**

v/104

# குழந்தைகள் சண்டை

எஸ். வி. எஸ்.

உலக மகா சண்டைகளைக் கண்டு எனக்குப் பயமே கிடையாது. ஆனால் இந்தக் குழந்தைகளின் சண்டைதான் என்னை ரொம்பவும் பயப்படுத்துகிறது!

இதோ கேளுங்கள், 'வீல்' என்று வரும் குரலை:

"அம்மா! ராதா அடிக்கிறா!"

"அப்பா! ராமு கிள்ளுறானே!"

"என்னடா இது, பசங்களா! எந்த நேரமும் என்ன சண்டைதானா!"

"அப்பா! அப்பா! ராமு என் தொடையை எப்படி நிமிண்டியிருக்கிறான் பார், அப்பா!"

"அவன்தான் என்னை முதலில் அடிச்சான் அப்பா!"

"அவன்தான் அப்பா முதலில் என்னை 'வெவ்வெவ்வே' என்று அழகு காட்டினான்!"

"அதற்கு முன்னாலே அவன்தான் 'மூஞ்சியைப் பாரு மூஞ்சியை — மூதேவி மாதிரி!' என்றான்!"

இப்படிப் போய்க் கொண்டிருந்தால் இதற்கு முடிவேது?

இதாகிலும் போகட்டும். வீட்டில் குழந்தைகள் இருக்கிறார்களே என்று ஏதாகிலும் தின் பண்டம் வாங்கிக்கொண்டு வந்து கொடுத்தால் அதுவும் விபரீதமாக முடிகிறது!

அன்றைக்குப் பாருங்கள், ஒரு பொட்டணம் 'மிக்ஸர்' வாங்கிக் கொண்டு போய் ராமுவிடம் கொடுத்து, "நீயும் ராதாவும் எடுத்துக்கொள்ளுங்கள்!" என்றேன்.

உடனே ராதா, "அப்பா, ராமுவிடம் கொடுக்காதே, அவன் அதிகமாக எடுத்துக் கொள்வான். நீயே சரி சமமாகப் எங்களுக்குப் பங்கிட்டுக் கொடுத்துடு, அப்பா!" என்று அழுதாள்.

"இது எதடா உபத்திரவம்!" என்று எண்ணிக் கொண்டே பிரித்துக் கொடுத்தேன்.

தொல்லை அதோடு விட்டது என்கிறீர்களா? கிடையாது!

ராமு "எனக்கு மூணு முந்திரி பருப்பு இருக்கே!" என்று மூன்று முந்திரி பருப்புகளை வைத்துக் கொண்டு குதித்தான்.

"எனக்கும்தான்.........!" என்று ஆரம்பித்த ராதா, சிணுங்கி அழ ஆரம்பித்து விட்டாள்! அவளுக்கு இரண்டு முந்திரி பருப்புகள்தான் இருந்தன.

"அப்பா, அவனுக்கு மட்டும் மூணு முந்திரி பருப்பு! உம், உம், உம்...!"

"அதற்கு நான் என்ன பண்ணட்டும்?" என்றேன்.

"அவன்தான் உனக்குச் செல்லம்! வேணும்னு மூணு முந்திரி பருப்பு இருக்கிற பங்காகப் பார்த்துக் கொடுத்தாய்!" என்று அசட்டுப் பிசட்டு என்று உளறினாள் அவள். கோபம், அறையலாம் போல வருகிறதல்லவா?

இவர்கள் சண்டையைத் தீர்ப்பதற்கு அடுத்த நாளிலிருந்து ஒரு காரியம் செய்தேன். அதாவது மறு நாளிலிருந்து காலணாவுக்குக் கூட ஒரு தின்பண்டமும் வாங்கி வருவதில்லை என்பதாக!

ஆனாலும் மனசு கேட்கிறேன் என்கிறதா? ஒரு தடவை ராமுவுக்கு ஒரு சாக்லெட் கொடுத்து, "ராதாவுக்குத் தெரியாமல் சாப்பிடு!" என்று சொன்னேன்.

அப்புறம் ராதாவைக் கூப்பிட்டு, அவளிடமும் ஒரு பெப்பர்மெண்டைக் கொடுத்து, "ராமுவுக்குத் தெரியாமல் சாப்பிடு!" என்றேன்.



அவர்களுக்கு வாங்கிக் கொடுக்காமலிருக்க என் மனசு எப்படிக் கேட்கவில்லையோ, அதே போல குழந்தைகளுக்கும் அப்பாவின் விசேஷ சலுகையைப் பற்றி ஒருவருக்கொருவர் சொல்லிக் கொள்ளாமல் இருக்க முடியவில்லை!

"அப்பா எனக்கு மட்டும் சாக்லெட் கொடுத்தாரே!" என்றான் ராமு.

"அப்பா எனக்கும்தான் ஒரு பெப்பர்மெண்ட் கொடுத்தார்!" என்றான் ராதா.

பிறகு இரண்டு பேரும் என்னிடம் வந்து, "அவனுக்கு மட்டும் என்ன அப்பா சாக்லெட்?"—"அவளுக்கு மட்டும் என்ன அப்பா பெப்பெர்மெண்ட்?" என்று சண்டை போட ஆரம்பித்து விட்டார்கள்.

இப்படி எத்தனையோ அப்பாக்கள், எத்தனையோ குழந்தைகளிடம் அகப்பட்டுத் திண்டாடிக் கொண்டிருப்பார்கள். இப்படிப்பட்ட திண்டாட்டம் நாம் மட்டும் அனுபவிக்கவில்லை; நம்மைப் படைத்த சர்வேச்வரனே அனுபவித்தான் என்கிற போது நமக்குச் சற்று ஆறுதல் ஏற்படுகிறது. ஆமாம். ஒரு சமயம் யாரோ ஒருவர் சிவபெருமானிடம் ஒரு பழம் கொண்டு வந்து கொடுத்தாராம். அவர் தம் அருமருந்தன்ன குழந்தைகளாகிய கணபதியையும் கந்தனையும் கூப்பிட்டு, "யார் இந்த உலகத்தை முன்னாலே ஒரு பிரதக்ஷிணம் பண்ணிவிட்டு வருகிறார்களோ, அவர்களுக்கு இந்தப் பழம்!" என்றாராம்.

உடனே முருகப் பெருமான் தமது மயில் வாகனத்தில் ஏறிக் கொண்டு புறப்பட்டு விட்டாராம்.

தொந்தி கணபதி பார்த்தாராம். என்ன செய்வது என்று புரியவில்லை. சிவபெருமானையே ஒரு பிரதக்ஷிணம் செய்து விட்டு, "நான்தான் உலகம்; உலகமே நான்தான் என்றாயே அப்பா, அதனால் உன்னைச் சுற்றினால் உலகத்தைச் சுற்றினாற்போலத்தானே?" என்றாராம்.

அந்த அசட்டு அப்பா, தம் மூத்த பிள்ளையின் சமத்காரமான வார்த்தையைக் கேட்டுப் பழத்தைக் கொடுத்து விட்டாராம்.

உலகத்தைச் சுற்றி வந்த முருகப் பெருமான் கோபமடைந்து, ஆண்டிப் பண்டாரமாக ஒரு குன்றின்மேல் போய் நின்று விட்டாராம்! கடைசியில் "நீயே பழம்; பழம் நீ" என்று சொல்லி சமாதானப் படுத்தி அழைத்து வந்தாராம் அந்த சிவபெருமான்.

* * *

அமெரிக்க ஜனாதிபதியாக இருந்த ஆப்ரகாம் லிங்கன் வீட்டில் ஒரு சமயம் ஏகக் கூச்சலாக இருந்ததாம். அடுத்த வீட்டுக்காரர் "என்ன?" என்று விசாரித்தாராம்.

"இந்தக் குழந்தைகள், உலக வல்லரசுகளைப் போலவே சண்டை பிடிக்கின்றன. என் கையில் மூன்று மிட்டாய்கள் இருக்கின்றன. ஒவ்வொரு குழந்தையும் தனக்கு இரண்டு மிட்டாய்கள் வேண்டும் என்று கேட்டுத் தொலைக்கிறது!" என்றாராம்.

இரண்டாவது மகா யுத்தத்துக்குப் பிறகு இப்போது நாலு வல்லரசுகள் சண்டை போட்டுக் கொள்வதைப் பார்த்தால், இந்தப் பாடம் அவரவர் குழந்தைகளிடம் கற்றுக் கொண்டதோ என்று எனக்குச் சந்தேகம் ஏற்படுவது நியாயந்தானே?

# காலக்ஷேபம்

## இது வேறு ரகம்!

ஒரு சங்கத்தின் வருஷாந்திரக் கொண்டாட்டத்தின் போது தலைமை வகித்த பிரமுகர் பின் வருமாறு பேசினார்:—"நான் பார்த்த பல சங்கங்களில், அங்கத்தினர்களில் பாதிப் பேர்தான் சங்கத்திற்காக உழைப்பார்கள். மற்றப் பாதிப் பேர் சோம்பேறிகளாக இருப்பார்கள். ஆனால் இந்தச் சங்கம் அப்படியல்ல: அதற்கு நேர் எதிர்!"

—ரா. தேவராஜன்.

## குரல் கேட்குமா?

அபேக்ஷகர் (தேர்தல் சமயத்தில்):—என்னை மட்டும் நீங்கள் தேர்ந்தெடுத்தீர்களானால் ஆறாயிரம் மைல்களுக்கு அப்பாலிருக்கும் பிரிட்டிஷ் மந்திரிகளின் காதில் விழும்படி சிம்மகர்ஜனை செய்வேன்.........

கூட்டத்தில் ஒரு குரல்:—ஐயா! கொஞ்சம் உரக்கப் பேசுங்கள். காதில் விழவில்லை!

—ஆர். கணபதி.

## சரிதான்!

விச்சு:—என் மாமா, நான் ஸ்டேஷனிலே இறங்கி உங்க வீட்டுக்கு எப்படி வருகிறது?

மாமா:—போடா மண்டு, வைத்தியக் காரனைக் கேட்டால்கூடச் சொல்லுவானே!

விச்சு:—அதுதான் மாமா, உன்னைக் கேட்டேன்! —ஆர். செல்லப் பிள்ளை.

## அசுர சாதகம்

டாக்டர்:—ஏது, நேத்தியைவிட இன்னிக்கு உங்களுக்கு இருமறது சுலபமா இருக்கறாப் போலே இருக்கே!

நோயாளி:—அதுக்கென்ன! ராத்திரி யெல்லாம் தூங்கினேனா? அசுர சாதகமோன்னோ! —டி. வி. எஸ். மணி

# சந்திர ஹாரம்

ஆசிரியர்: பிரேம்சந்த் | மொழிபெயர்ப்பு: ரா. வீழிநாதன்

— ஏழாம் அத்தியாயம் —

## "திருடன்! திருடன்!"

இரவு சுமார் பத்து மணி இருக்கும். பத்மா மாடியில் உள்ள வெளி வராந்தாவில் படுத்துக் கொண்டிருந்தாள். நிலவு பால் போல் காய்ந்து கொண்டிருந்தது. அந்த நிலவு வெளிச்சத்திலே நகரத்தின் கோபுரங்கள், ஸ்தூபிகள், மரங்கள் எல்லாம் வெகு ஒய்யாரமாகக் காட்சியளித்துக் கொண்டிருந்தன. பத்மா அந்தச் சந்திரனையே உற்று நோக்கிக் கொண்டிருந்தாள். அவளுடைய மனத்தில் பழைய நினைவுகள் எல்லாம் வெள்ளித் திரையில் வந்து போகும் படங்களைப்போல ஒன்றன் பின் ஒன்றாக வந்து போய்க் கொண்டிருந்தன. இந்த நிமிஷம் நினைத்த விஷயம் அடுத்த நிமிஷம் மறந்து விடும். எவ்வளவு மூளையைச் செலவிட்டாலும் பிறகு நினைவுக்கே வராது. ஒரு தடவை அவள் தன் பிறந்தகத்தை நினைத்துக் கொண்டாள். கண்களில் நீர் சுரந்து விட்டது. அடுத்த கணம் தோழிகளின் நினைவு எழவே, கண்ணீர் மாயமாய் மறைந்து விட்டது. வதனத்தில் மகிழ்ச்சி தாண்டவமாடியது. தன் பால்ய நினைவுகளில் லயித்த அவள் தானாகவே 'களுக்' கென்று சிரித்துக் கொண்டாள். இதே சமயம் ரமாகாந்த் வதனத்தில் புன்முறுவல் தாண்டவமாட, கையில் ஒரு பொட்டணத்தை ஏந்திய வண்ணம் உயரே வந்து பக்கத்தில் கிடந்த கட்டிலில் உட்கார்ந்து கொண்டான்.

"அது என்ன பொட்டணம்?" என்று கேட்டாள் பத்மா.

"என்னவாயிருக்கலாம்? நீதான் சொல்லேன், பார்ப்போம்" என்று சிரித்தவாறே கேட்டு வைத்தான் ரமாகாந்த்.

"உங்கள் முகம்தான் 'அது புன்முறுவல்' என்று சொல்லுகிறதே!" என்று சொல்லியவாறு பத்மா சிரிப்பை அடக்க மாட்டாமல் சிரித்து விட்டாள்.

"இல்லை, அப்புறம்...?"

"சித்ரா தேவியைப் பொட்டணத்தில் கட்டிப் பிடித்துக் கொண்டு வந்திருப்பீர்கள்!"

"அதுவும் இல்லை...!"

"அப்படியானால் அது காதற் கனியாகத்தான் இருக்க வேண்டும்."

"கனி யில்லை; மலர்தான்! இன்று அதைக் கொண்டு உன்னைச் சிங்காரிக்கப் போகிறேன்!" என்றான் ரமாகாந்த்.

இதைக் கேட்ட பத்மாவின் வதனம் சூரியனைக்கண்ட தாமரைபோல் மலர்ந்தது. ரமாகாந்த் மிகவும் பிரியமாக அவள் தலையில் புஷ்பத்தைச் சூட்டினான். 'கமகம' வென்று வாசனை வீசும் புஷ்பத்தின் 'ஜில்' லென்ற ஸ்பரிசம், அவளுடைய பூப் போன்ற உடலைப் புல்லரிக்கச் செய்து விட்டது.

அந்த மலர்களைப் போலவே அவனுடைய உடலும் மலர்ச்சியுற்றது.

பத்மா வாய் திறக்கவில்லை. அவளுக்குத் தன் கணவனைப் பார்க்கக் கூட வெட்கமாயிருந்தது. கண்ணாடியில் போய் தன் அழகைப் பார்த்துக் கொள்ள வேண்டும் என்ற அவா அவனுடைய உள்ளத்தில் உதித்தது. எதிர்ப்புறத்தே இருந்த அறையில் சுவர் ஒட்டி விளக்கு ஒன்று எரிந்து கொண்டிருந்தது. அவன் எழுந்து அந்த அறைக்குள் போனான். அங்கேயிருந்த கண்ணாடிக் கெதிரே நின்று கொண்டு, மெய்மறந்து தன் அழகைப் பார்க்கலானான். அழகு மயக்கத்தில் தானே 'ரம்பை' என்று கற்பனை செய்து கொண்டான். பிறகு அங்கேயிருந்த வெற்றிலைச் செல்லத்தைக் கையில் எடுத்துக் கொண்டு, வெகு ஒய்யாரமாக வெளியே வந்தான். நேரே கணவனுக்கு அருகில் போய் உட்கார்ந்து கொண்டு வெற்றிலை மடிக்கலானான்.

ரமாகாந் தான் செய்யத் துணிந்திருக்கும் வஞ்சக எண்ணத்தை எண்ணி, மிகவும் வருந்தினான். பத்மா தன் காதல் வீசும் கண்களால் அவனை ஒரு தடவை பார்த்தான். நம்பிக்கையும் எளிமையும் தாண்டவமாடும் அவளுடைய பார்வைக் கெதிரே, அவனால் தலை நிமிர்ந்து நிற்க முடியவில்லை. பேசாமல் அவன் 'சட்' டென்று முகத்தைத் திருப்பிக்கொண்டு விட்டான். 'என்னைப் போன்ற பயந்தாங் கொள்ளி இந்தப் புவியில் யாருமே இருக்க முடியாது. நான் 'முடியாது' என்று சொல்லியிருந்தால் அப்பா என் தலையைச் சீவி விடுவாரா, என்ன? நான் புத்தி கெட்டுப் போய் அப்பொழுது என் சம்மதித்தேன்?............ பத்மாவிடம் வீட்டின் நிலைமையை விளக்கித் தெளிவாகச் சொல்லியிருந்தால் இம்மாதிரி யெல்லாம் கஷ்டப்பட வேண்டியிருந்திராதல்லவா? அப்படிச் செய்யாமல் இருந்தது என் மேல்தானே தப்பு?' என்று எண்ணும் பொழுதே அவனுடைய கண்களில் நீர்மல்கி நின்றது. அதைக் காட்டிக் கொள்ளாமல் இருக்கும் பொருட்டு, எழுந்து மாடி பின் கைப்பிடிச் சுவருக் கருகில் போய் நின்று கொண்டான். தான் செய்யத் துணிந்திருக்கும் வஞ்சகச் செயலைப் பற்றி அவளிடம் கூறி மன்னிப்புக் கேட்டுக் கொண்டு விடலாமா என்று கூட ஒரு கணம் சிந்தித்தான். ஆனால் 'பத்மா தன்னைப் பற்றி என்ன எண்ணுவாள்?' என்ற எண்ணம் அடுத்த கணமே எழுந்து, அவனுடைய மனதை மாற்றி விட்டது. அவன் பத்மாவுக் கெதிரில் தன்னைத் தாழ்ந்தவனாகக் காட்டிக் கொள்ள விரும்பவில்லை.



பத்மா, அவனை அன்புடன் ஒரு முறை பார்த்து விட்டு, "கல்யாணத்துக்கு முன்னால் என் தாத்தா உங்களைப் பார்க்க வந்திருந்தாரல்லவா? அவர் திரும்பி வந்து, அம்மாவிடம் உங்களைப் பற்றி என்னவெல்லாம் புகழ்ந்தார், தெரியுமா? அவர் வருணித்த வருணனையைக் கேட்ட பிறகு, 'உங்களைப் பார்க்க வேண்டும்' என்று என் மனம் என்ன துடியாய்த் துடித்தது, தெரியுமா?" என்றாள்.

ராமநாத் ஒரு நீண்ட பெரு மூச்சு விட்டானே தவிர, வாய் திறந்து ஒரு வார்த்தை கூடச் சொல்லவில்லை.

"என்னுடைய தோழிகள் எல்லாரும் உங்களைப் பார்த்து அப்படியே மெய் மறந்து நின்று விட்டார்கள். நளினி இருக்கிறாளே, அவள் ஜன்னலை விட்டு நகரவே யில்லை. உங்களோடு ஒரு வார்த்தையாவது பேச வேண்டும் என்று துடியாய்த் துடித்தாள். நீங்கள் உள்ளே வந்தபொழுது அவள்தானே உங்களுக்கு வெற்றிலை கூட மடித்துக் கொடுத்தாள். உங்களுக்கு நினைவிருக்கிறதோ?" என்று மறுபடியும் கேட்டாள் பத்மா.

ராமநாத் இதற்கும் பதிலே சொல்லவில்லை.

"என்னா! ஒருத்தி மூக்கும் முழியுமா, 'செக்கச் செவேல்' என்று வந்திருந்தாளே, அவளுடைய கன்னத்திலே கூட ஒரு சின்ன கறுப்பு மச்சம் இருந்ததே, அவளை நீங்கள் கூடக் கடைக் கண்ணால் அன்பொழுகப் பார்க்கவில்லையா? நீங்கள் பார்த்ததும் அவளுக்கு ஒரே வெட்கமாய்ப் போய் விட்டது! தோழிகள் எல்லாரும் அவளைப் படாத பாடு படுத்தி அழ வைத்து விட்டார்கள்! அவளை உங்களுக்கு ஞாபகமிருக்கிறதோ?" என்று மறுபடியும் விடாமல் கேட்டாள் அவள்.



"ஞாபகம் இல்லையே!" என்று கிணற்றில் விழுந்தவனைப் போல் சொன்னான் ராமநாத்.

"ஞாபகமில்லையா? அடுத்த தடவை ஊருக்குப் போகும் பொழுது, அவளைக் காட்டுகிறேன். ஆமாம், இன்றைக்கு நீங்கள் கடைத் தெருவுக்குப் போயிருந்தீர்களோ?"

"இன்றைக்குப் போக ஒழியவே யில்லை" என்று தலை குனிந்தவாறே, ராமநாத் பதில் சொன்னான்.

"போங்கோன்னா! இனிமேல் நான் உங்களோடு பேசவே போகிறதில்லை. எப்பொழுது பார்த்தாலும் இந்த மாதிரி சாக்குப் போக்குச் சொல்லுகிறீர்களே! ஆமாம், ஒரே பேச்சு! நாளைக்காவது வாங்கித் தருவீர்களா, மாட்டீர்களா?" என்று கேட்டாள் பத்மா.

ராமநாத்துக்கு மனதை என்னவோ செய்தது. அவனோ சந்திர ஹாரத்தின் நினைவாகவே இருக்கிறான்! விதியோ, அவனுக் கெதிராகச் சதி செய்கிறது! எந்தப் பெண்ணுக்காக அவன் தன் உயிரையும் தியாகம் செய்யத் தயாரா யிருக்க வேண்டுமோ, அந்தப் பெண்ணிடத்தில் இருப்பதை யெல்லாம் பறிப்பதற் கல்லவா அவன் சூழ்ச்சி செய்ய வேண்டி யிருக்கிறது! இதை எண்ணும் பொழுது, 'அப்படியே மாடியி லிருந்து கீழே குதித்து உயிரையே மாய்த்துக் கொண்டு விட்டால் என்ன?' என்றுகூட அவன் நினைத்தான்.

நள்ளிரவு கழிந்து விட்டது. சந்திரனும் திருடனைப் போல், ஒரு மரத்தின் மறைவில் ஒளிந்து கொண்டு பார்க்கலானான். பத்மா தன் கணவரின் கழுத்தில் கையைப் போட்ட வண்ணம் தூக்கத்தில் ஆழ்ந்திருந்தாள். ராமநாத் மனதை மிகவும் திடப்படுத்திக் கொண்டு மெதுவாக எழுந்திருந்தான். ஆனால், தூக்கத்தில் ஆழ்ந்திருந்த

அந்தப் பூங்கொடி அவனுடைய மனதை ஒரு உலுக்கு உலுக்கிவிட்டாள். ஆசை ததும்பும் விழிகளுடன் அவள் உறங்கும் அந்தக் கமல வதனத்தைச் சிறிது நேரம் பார்த்தவாறு மெய்மறந்து நின்றான். அறைக்குள்ளே போக அவனுக்குத் துணிவு உண்டாகவில்லை. மறுபடியும் படுத்துக் கொண்டு விட்டான்.

பத்மா திடுக்கிட்டு எழுந்து, "எங்கே போகிறீர்கள்? பொழுது விடிந்து விட்டதா, என்ன?" என்று கேட்டாள்.

"இல்லை, தாகமாயிருந்தது. தண்ணீர் குடிப்பதற்காக எழுந்திருந்தேன்!" என்று மென்று விழுங்கிக் கொண்டே பதில் சொன்னான் ரமாகாந்.

பத்மா ரமாகாந்தின் கையைப் பிடித்து இழுத்து அவனைப் படுக்க வைத்தவாறே, "இம்மாதிரி யெல்லாம் நீங்கள் என்னை மந்திரம் போட்டு மயக்குவது என்றால் நான் ஓடிப் போய் விடுவேன். ஆமாம், எதற்காக என்னை இப்படி யெல்லாம் பார்க்கிறீர்கள்? நீங்கள் என்ன செய்கிறீர்கள் என்றே எனக்குப் புரியமாட்டேன் என்கிறதே! என் மனதை ஆட்டி வைக்க நீங்கள் என்ன மந்திரம்தான் கற்றுக் கொண்டு வந்திருக்கிறீர்களோ, தெரியவில்லை. புருஷர்களின் கண்களில் ஒரு வித மந்திர சக்தி இருக்கிறது என்று வாஸந்தி அடிக்கடி சொல்லுவாள். அது நிஜம்தான் போலிருக்கிறது!" என்றாள்.

ரமாகாந், "மந்திர சக்தியாவது, இந்திர சக்தியாவது! அதெல்லாம் ஒன்றுமில்லை. கண்களுக்குத் தாகம் எடுத்தால் தணித்துக் கொள்ள வேண்டுமோ, இல்லையோ! அது தான் உன்னைப் பார்க்கிறேன்!" என்று மனமுடைந்த குரலில் சொன்னான்.

பிறகு இருவரும் தூங்க ஆரம்பித்தார்கள். அவளோ உல்லாசத்தில் ஆழ்ந்து தூங்க முயன்றாள்; அவனோ கவலையில் உழன்று தூங்க முயன்றான்.

அதற்கப்புறம் மூன்று மணி நேரம் சென்றுவிட்டது. துவாதசிச் சந்திரனும் ஜகஜ்ஜோதியான தன் விளக்கை அணைத்து விட்டு ஓய்வு எடுத்துக் கொள்ளச் சென்று விட்டான். விடியற்காலையின் குளிர்ந்த காற்று 'ஜிலுஜிலு'வென்று வீச ஆரம்பித்து விட்டது. கடைசி ஆட்டம் வரையில் விழித்துக் கொண்டிருக்கும் வெற்றிலைப் பாக்குக் கடைக்காரர்கள் கூடத் தூங்க ஆரம்பித்து விட்டனர். ஆனால் ரமாகாந் மட்டும்தான் தூங்கவில்லை. அவன் மனம் போராடிக் கொண்டிருந்தது. மனதைத் திடப்படுத்திக் கொண்டு எழுந்து உட்காருவான், சில சமயம். அடுத்த கணம் மனச் சோர்வுற்றுப் படுத்து விடுவான். கடையில் காலடிக்கும் சத்தம் காதில் விழுந்ததோ இல்லையோ, மனதைத் திடப்படுத்திக் கொண்டு எழுந்து அறைக்குள்ளே போனான். நகைப் பெட்டி அலமாரியில் இருந்தது. ரமா மெதுவாக அலமாரியைத் திறந்து அதை எடுத்துக் கொண்டான். உடல் நடுநடுங்க, மெது வாகக் கீழே இறங்கினான். பதட்டத்தில் சில நகைகளை மட்டும் பொறுக்கி எடுத்துக் கொண்டு போக அவனுக்கு அவகாசம் கிடைக்கவில்லை.

தயாநாதபாபு கீழே உள்ள வராந்தாவில் தூங்கிக்கொண்டிருந்தார். ரமாகாந் மெது வாக அவரை எழுப்பினான். அவர் அலறிப் புடைத்துக் கொண்டு எழுந்து, "யார், அது?" என்று உளறிக் கொட்ட ஆரம் பித்தார்.

ரமாகாந் உதட்டில் விரலை வைத்துச் சத்தம் போடாமல் இருக்கும்படி ஜாடை காட்டி, "நான்தான் நகைப் பெட்டி கொண்டு வந்திருக்கிறேன், இந்தாருங்கள்!" என்றான்.

தயாநாதபாபு கண்ணைத் தேய்த்துக் கொண்டு எழுந்து உட்கார்ந்தார். இது வரை அவருடைய கண்கள் மட்டும்தான் விழித்திருந்தன. இப்பொழுது அவருடைய அறிவும் விழித்துக் கொண்டது. 'நான் நகைகளை அவளுக்குத் தெரியாமல் கொண்டு வந்து தந்துவிடுகிறேன்' என்று ரமாகாந் சொன்னபொழுது, 'ஏதோ ஆத்திரத்தில் சொல்லுகிறான், அப்படி யெல்லாம் செய்யமாட்டான்' என்று அவர் எண்ணினார். 'ரமா சொன்னபடி செய்துவிடுவான்' என்ற எண்ணமே அவ ருக்கு இது வரை எழவில்லை. இம் மாதிரி நீசச் செயல்கள் செய்ய அவருடைய மனம் ஒப்பவில்லை. பையனுடன் இது சம்பந்தமாக வாதாடலாம் என்றாலோ, அதற்கு அது சரியான சந்தர்ப்பமாக இல்லை. அவர் தன்னைத் தானே கொத்து கொண்டு, "இதை ஏன் எடுத்து வந்தாய்?" என்று கேட்டார்.

ரமாகாந் அதிகப் பிரசங்கித்தனமாக, "நீங்கள் தானே கொண்டு வரச் சொன் னீர்கள்?" என்றான்.

"எதற்காக இப்படிப் பொய் சொல்லு கிறாய்?" என்று தயாநாதபாபு கேட்டார்.

"அப்படியானால் கொண்டுபோய் இருந்த இடத்தில் வைத்து விடட்டுமா?"

ரமாகாந்தின் இந்தக் கேள்வி தயாநாத பாபுவைத் தர்ம சங்கடத்தில் ஆழ்த்தி விட்டது. அவர் வெட்கிப்போய், "இனி மேல் கொண்டு போய் வைப்பானேன்? எங்கேயாவது அவன் பார்த்துவிட்டால் அப்புறம் அனர்த்தம் தான். நாடு சிரிக்கும் நிலைமை ஏற்பட்டு விடும். இந்த நகைப் பெட்டியைக் கொண்டுபோய் என் பெரிய பெட்டியில் வைத்துவிட்டுப் போய்த் தூங்கு. அவன் விழித்துக் கொண்டுவிடப் போகிறான்! உம்......சீக்கிரம்!" என்றார்.

வராந்தாவுக்குப் பின்னால்தான் தயாநாத பாபுவின் அறை இருந்தது. அங்கே தேவதாரு மரத்தினால் செய்யப்பட்ட பெரிய பெட்டி ஒன்று வைக்கப்பட்டிருந்தது. ரமாகாந்த் நகைப் பெட்டியை அதற்குள் வைத்து விட்டு அவசர அவசரமாக உயரே ஏறிச் சென்றுவிட்டான். 'பத்மா தூங்குகிறாளா, விழித்துக் கொண்டிருக்கிறாளா?' என்பதை அறிந்து கொள்ளுவதற்காக, நடக்கும் போதே கால்களைக் கொண்டு கொஞ்சம் ஓசைப் படுத்திப் பார்த்தான். யாருக்கும் பொழுது புலரும் பொழுதுதானே நல்ல தூக்கம் வரும்? ஆகவே பத்மாவும் அப்போது நல்ல தூக்கத்தில் ஆழ்ந்திருந்தாள்.

ரமாகாந்த் கட்டிலில் உட்கார்ந்தான். பத்மா திடுக்கிட்டு எழுந்து அவனை அணைத்துக் கொண்டாள்.

"ஏன் இப்படிப் பயப்படுகிறாய்?" என்று கேட்டான் ரமாகாந்த்.

பத்மா பரபரப்புடன் கண்களை அகல விழித்து, "இல்லை...... ஒரு கனவு கண்டேன்...... ஆமாம், நீங்கள் ஏன் உட்கார்ந்து கொண்டிருக்கிறீர்கள்? இன்னும் பொழுது விடிய எத்தனை நேரம் இருக்கிறது?" என்று கேட்டாள்.

ரமாகாந்த் படுத்துக் கொண்டே, "பொழுது விடியப் போகிறது. ஆமாம், நீ என்ன கனவு கண்டாய்?" என்று கேட்டான்.

"யாரோ ஒரு திருடன் என் நகைப் பெட்டியை எடுத்துக் கொண்டு போவது போல கனவு கண்டேன்...!"

ரமாவின் இதயம், பழுக்கக் காய்ச்சிய இரும்பில் சம்மட்டி கொண்டு அடிப்பது போல, 'படர், படர்' என்று அடித்துக் கொண்டது. அவனுக்கு ரத்தமே உறைந்து விட்டது போன்ற உணர்ச்சி ஏற்பட்டது. ஒரு வேளை, 'நான் நகைப் பெட்டியை எடுத்துக் கொண்டு போன பொழுது இவள் என்னைப் பார்த்திருப்பாளோ?' என்ற சந்தேகம் எழுந்து அவனுடைய மனதை வாட்டியது. அடுத்த நிமிஷம் அவன் தன்னையும் மறந்து உரக்க, "திருடன்! திருடன்!" என்று கத்தினான்.

கீழே வராந்தாவில் படுத்திருந்த தயாநாத பாபுவும், அவனைத் தொடர்ந்து, "திருடன்! திருடன்!" என்று இரைந்து குரல் கொடுத்தார்!

பத்மா, பதட்டத்துடன் எழுந்து தன் அறைக்குள் ஓடினாள். அலமாரியைத் திறந்ததும் அதில் நகைப் பெட்டி இல்லாமற் போகவே, அவள் நிலைக் குத்தல் இட்டவள் போல் கீழே சாய்ந்தாள்.

(தொடரும்)

# படித்துப் பார்!

## மதுபானம் ஒழிக

[ஆசிரியர்: கே. ஆர். கல்யாணராமய்யர்; பிரசுரம்: இளமணி பதிப்பகம், மவுண்ட் ரோடு, சென்னை; விலை: அணா 3.]

முதலாவது உலக மகா யுத்தத்தின்போது லாயிட் ஜார்ஜ் பிரிட்டிஷ் பிரதம மந்திரியாக இருந்தார். யுத்தம் ஆரம்பமான சமயத்திலே அவர் பிரிட்டிஷ் மக்களுக்குச் செய்த ஒரு பிரசங்கத்தில், "நாம் மூன்று விரோதிகளை எதிர்த்து யுத்தம் செய்கிறோம். முதல் எதிரி ஜெர்மனி, இரண்டாவது எதிரி ஆஸ்திரியா, மூன்றாவது எதிரி மதுபானம். இந்த மூன்றிலும் மதுபானமே நமக்குப் பெரிய பகைவன்" என்று சொன்னாராம்.

மேல்நாடுகளிலே குடிப்பது என்பது சர்வ சாதாரணமான விஷயம்—காப்பி, டீ சாப்பிடுவதைப் போல! அந்நாட்டில் பிறந்த லாயிட் ஜார்ஜே மதுபானத்தைக் கண்டித்து இவ்வளவு அழுத்தந் திருத்தமாகச் சொல்லியிருப்பது ரொம்பவும் அதிசயமான விஷயம்.

லாயிட் ஜார்ஜ் மேற்படி விஷயத்தைச் சொல்லி ஏறக்குறைய கால் நூற்றாண்டு கழிந்து விட்டது. லாயிட் ஜார்ஜும் இறந்து விட்டார். அவர் சொன்ன விஷயம் இப்போது உலகத்தில் யாருக்காவது ஞாபகம் இருக்கிறதோ என்னவோ, நமக்குத் தெரியாது. ஆனால், நம்முடைய ராணிப்பேட்டை ஸ்ரீ கல்யாணராமய்யர் அதை இன்னும் அப்படியே ஞாபகத்தில் வைத்திருக்கிறார். ஞாபகத்தில் வைத்திருப்பது மல்லாமல், தாம் எழுதிய "மதுபானம் ஒழிக" என்னும் நூலில் இதைக் குறிப்பிட்டு மிருக்கிறார்.

முப்பத்தொரு பக்கங்கள் கொண்ட இந்தச் சிறு நூலில், மதுபானத்தை ஏன் ஒழிக்க வேண்டும் என்பதற்கு ஆதாரமாக காந்திஜியின் கருத்துக்களையும் ராஜாஜியின் மணிமொழிகளையும் இந் நூலாசிரியர் எடுத்துக் காட்டி யிருக்கிறார். பொய்யாமொழிப் புலவர் உள்பட வேறு பல உலகப் பெரியார்களின் அருமையான உயரிய கருத்துக்களையும் சேகரித்துக் கொடுத்திருக்கிறார்.

எட்டு ஜில்லாக்களில் மதுவிலக்கு அமுலுக்கு வந்திருக்கும் இந்தச் சமயத்தில், மதுவிலக்குப் பிரசாரம் செய்ய விரும்புபவர்களுக்கு இந்நூல் வெகு உதவியாக இருக்கும்.

## கி. பி. 2000

[ஆசிரியர்: மு. வரதராசன்; பிரசுரம்: தமிழர் பதிப்பகம், 81, லிங்க செட்டித் தெரு, சென்னை; விலை: ரூ. 1-12-0.]

நாளை என்ன நடக்கும் என்பதும் நமக்குத் தெரியாது; நாளைநின்று என்ன நடக்கும் என்பதும் நமக்குத் தெரியாது. ஆனால், தீர்க்க தரிசனம் மிகுந்த புகழ் பெற்ற எழுத்தாளர்கள் நாளை நடக்கும் விஷயத்தை மாத்திரம் அல்ல, இன்னும் ஐம்பது-நூறு வருஷங்களுக்கப்பால் உலகத்தில் என்ன நடக்கும் என்பதைக் கூட ரொம்பத் தெளிவாகச் சொல்லி விடுகிறார்கள். ஹெச். ஜீ. வெல்ஸ், பெர்னாட்ஷா போன்ற மேதாவிகள் வருங்கால உலகத்தைப் பற்றிய பல அற்புதமான சிந்தனைக் கதைகளையும் நாடகங்களையும் எழுதியிருக்கிறார்கள். மேற்படி முறையைத் தழுவி ஆசிரியர் வரதராசன் இந்தப் புத்தகத்தை எழுதியிருக்கிறார். இன்னும் ஐம்பது வருஷம் கழித்து அதாவது கி. பி. 2000-ல் தமிழ்நாடு எப்படி யிருக்கும்—எப்படி யிருக்க வேண்டும் என்பதைப் பற்றித் தமது கருத்துக்களைச் சுவையுடன் எழுதியிருக்கிறார். தமிழர்கள் அவசியம் படிக்க வேண்டிய அருமையான புத்தகம்.

## வான வில்

[ஆசிரியர்: அரு. ராமநாதன்; பிரசுரம்: செந்தமிழ் நிலையம், இராயவரம், புதுக்கோட்டை; விலை: ரூ. 3—0—0.]

ஒரு தமிழாசிரியரின் வறுமை தோய்ந்த வாழ்க்கையில் எத்தனையோ கஷ்டங்கள் குறுக்கிடுகின்றன. வயது வந்த, அழகிய, விவாகமாகாத அவரது பெண். அவள் காதலுக்குப் பாத்திரமான அத்தான் செல்லத்துரை. அவளையே விரும்பி ஏமாந்த மிஸ்டர் வேதாந்தம். மிஸ்டர் வேதாந்தத்தைக் காதலிக்காத அவன் அத்தை மகள். தமிழய்யாவின் மனைவி இத்தனை பேருமாகச் சேர்ந்து இந் நாடகத்தின் சோகத்தையும் வயிற்றெரிச்சலையும் நிரப்பி யிருக்கின்றனர். தற்கொலை, அதன் மூலம் தியாகம், காதல் மணம், கலப்பு விவாகம் முதலிய விஷயங்களும் இடம் பெற்றிருக்கின்றன. "உள்ளத்தைத் தொடும் உணர்ச்சி வாய்ந்த கட்டங்களுடன், வாழ்க்கையைத் தத்ரூபமாய்ச் சித்திரிக்கும் நாடகம்" என்று பிரசுரகர்த்தர்களே கூறும்போது நாம் கூறுவதற்கு வேறு என்ன இருக்கிறது?

## பண்டிகைப் பரிசு

[ஆசிரியர்: வி. ஜி. ஸ்ரீநிவாசன்; பிரசுரம்: ஓம்கார நூலகம், புதுக்கோட்டை; விலை: ரூ. 1—8—0.]

கதைச் சுவையோடு நகைச் சுவையும் கலந்திருக்கும் பத்துக் கதைகள் இந்தப் புத்தகத்தில் அடங்கி யிருக்கின்றன. நானு மொழிகளில் புலமையுள்ள ஸ்ரீ வி. ஜி. ஸ்ரீநிவாசனின் அழகான தமிழ்நடையை, 'ஹிந்துஸ்தானியால் தமிழுக்கு ஆபத்து வந்து விடும்!' என்று சொல்லும் ஒவ்வொருவரும் அவசியம் படித்துப் பார்க்க வேண்டும்.

## பாரத் கணித பஞ்சாங்கம்

[ஆசிரியர்கள்: புரோபஸர் எல். வி. எஸ். மணி B. A. (Hons), ஜோதிஷ பானு பண்டிட் இ. எஸ். கே. ஸ்வாமி; பிரசுரகர்த்தர்கள், மாடல் பப்ளிகேஷன்ஸ், 50, பத்ரையன் தெரு, ஜி. டி. சென்னை; விலை: அணா 6.]

பிரபல ஜோதிடர்கள் இருவர் கணித்த இந்த சர்வஜித் வருஷத்துப் பஞ்சாங்கம், காலத்துக்கேற்ற கோலம் பூண்டு விளங்குகிறது. அதாவது அட்டையில் அழகிய சுதந்திரக் கொடி பிடித்த பாரத மாதாவின் திருவுருவப் படத்துடன் திகழ்கிறது. நம்மில் சிலருக்குத் திதி, கிரகம், நட்சத்திரம் ஆகியவற்றில் நம்பிக்கை யில்லாம லிருக்கலாம். ஆனால் தேதி, கிழமை, பண்டிகை இவற்றில் நம்பிக்கை யில்லாதவர்கள் இல்லை. எனவே நம் எல்லாருக்கும் இந்த சர்வஜித் பஞ்சாங்கம் சர்வ உபயோகமானது.

## காந்திய நூல்கள்

| | | | |
|---|---|---|---|
| 1. | மாணவருக்கு | இரண்டாம் பதிப்பு | 8 4 0 |
| | ,, மலிவுப் பதிப்பு | ,, | 5 0 0 |
| 2. | பெண்களுக்கு | | அச்சில் |
| 3. | ஹிந்து முஸ்லிம் பிரச்னே | | 6 0 0 |
| 4. | சமஸ்தானப் பிரச்னே | | 6 0 0 |
| 5. | நமது மொழிப் பிரச்னே | | 2 8 0 |
| 6. | பிரிட்டிஷாருக்கு எனது வேண்டுகோள் | | ஸ்டாக் இல்லை |
| 7. | பாகிஸ்தானம் | | அச்சில் |

★

## புதுமைப் பதிப்பகம் லிமிடெட்

காரைக்குடி

# வாக்குறுதி

## ஸோமாஸ்

அருணாசலப் பத்தரின் அருமை மகள் வள்ளியம்மை. நம்பிராஜன் மகள் வள்ளியம்மையைப் போல் தினைப்புனம் காத்து ஆலோலம் பாடாவிட்டாலும், இந்த வள்ளியம்மை வீட்டிலே சதா காலமும் அற்புதமாகப் பாடிக் கொண்டிருப்பாள். அவள் முகத்தில் ஒரு குறுகுறுப்பும் கவர்ச்சியும் இருந்துகொண்டு எத்தனையோ இளைஞர்களை என்னென்னவோ பாடு படுத்தி விட்டன.

அருணாசலப் பத்தருக்குத் தம் அருமை மகளுக்கு வரன் தேடவேண்டிய அவசியமே இருக்கவில்லை. அந்தக் கவலையை நீக்கி வைத்தவன் கந்தசாமிதான். சின்னஞ்சிறு வயதிலிருந்தே வள்ளி எதிர் வீட்டுக் கந்தசாமியோடு கைகோர்த்துக் கொண்டு விளையாடுவதைக் கண்டு அருணாசலப் பத்தர் மனம் பூரித்துப் போவார். அவருடைய நண்பர் நாகலிங்கப் பத்தரின் ஏகபுத்திரன் தான் கந்தசாமி. ஆகையினால் அந்த இடத்துச் சம்பந்தம் அருணாசலப் பத்தருக்கு மிகவும் பிடித்திருந்ததில் அதிசயம் ஒன்றும் இல்லை.

'கந்தனும் வள்ளியும் போல இவர்களிருவரும் சேர்ந்து வாழவேண்டும்' என்று நினைத்து முருகப் பெருமானைப் பிரார்த்திக்கும்போது அருணாசலப் பத்தரின் கண்களில் நீர் நிறைந்துவிடும்.

நாகலிங்கப் பத்தரும், கந்தசாமிக்கும் வள்ளியம்மைக்கும் முடிபோட்டு விடவேண்டும் என்பதில் தீவிரமாய்த்தான் இருந்தார்.

வள்ளியம்மை குழந்தைப் பருவம் தாண்டிக் கன்னிப் பருவத்தை யடைந்து விட்டாள். கந்தசாமியும் வாலிபப் பருவத்தை யடைந்தான். அவர்களிடையே வளர்ந்துவந்த அன்பும் குழந்தைப் பருவத்திலிருந்து முதிர்வடைந்து காதலாகப் பரிணமித்தது.

இத்தனை நாட்களாகச் சதா சர்வ காலமும் கந்தசாமியுடனேயே காட்சி யளித்த வள்ளியம்மை இப்போதெல்லாம் வீட்டை விட்டு வெளியே வருவதே அபூர்வமா யிருந்தது. அப்படியே வந்தாலும் கந்தசாமியினால் அவளை நன்றாய்ப் பார்க்கக்கூட முடியவில்லை. அவள் முகந்தான் நாணத்தினால் கவிழ்ந்து விடுகிறதே!

இந்த இன்ப நாடகம் இப்படியே நடந்து கொண்டிருக்கவில்லை. நாகலிங்கப் பத்தர் திடீரென்று நோய் வாய்ப்பட்டுப் படுத்த படுக்கையாகி விட்டார். கந்தசாமி அவரை எவ்வளவோ அக்கறையோடுதான் கவனித்தான். ஆனாலும் நாகலிங்கப் பத்தர் தம் அருமை மகன் கந்தசாமியைத் தன்னந் தனியே விட்டு விட்டு விண்ணுலகம் போய் விட்டார். அதற்குப் பிறகு குடும்பத்தில் கஷ்டத்துக்கு மேல் கஷ்டமாக வந்து, கந்தசாமி அவன் தகப்பனார் வைத்து விட்டுப் போன ஒரே வீட்டையும் விற்றுப் பிழைக்கும்படியான காலம் வந்து விட்டது.

கந்தசாமி தனியாகக் கஷ்டப்பட்டுப் பிழைக்கும்படியாக அருணாசலப் பத்தர் அவனை விட்டுவிடவில்லை. அவனைத் தம்முடைய பட்டறையிலேயே வேலைக்கு வைத்துக் கொண்டு அவனுக்கு மாதச் சம்பளம் கொடுத்து வந்தார். ஆனால் கந்தசாமிக்கு இது அவ்வளவு திருப்தியைத் தரவில்லை. அதற்காக அவன் வேலையை விட்டுவிடவும் தயாராயில்லை.

இதன் காரணமாக, முன்பெல்லாம் இருந்தமாதிரி இப்பொழுது அவன் கேலியும் பரிகாசமுமாக இருப்பதில்லை. எப்படி இருக்க முடியும்?

★

அன்றையதினம் அந்த விபரீதச் சம்பவம் நேர்ந்து விடும் என்று கந்தசாமியோ வள்ளியோ எதிர்பார்க்கவில்லை. இல்லாவிட்டால் அத்தனை நாளும் கடைக் கண்ணோக்கிலேயே கந்தசாமியிடம் பேசி வந்த வள்ளியம்மை அன்று அவனை நெருங்கி நேரில் பேசியிருக்க மாட்டாள். கந்தசாமியும் அவளை அவ்வளவு தூரம் அநுமதித்திருக்க மாட்டான்.



"வள்ளி, என்னை மறந்துவிடு. நான் உன் அப்பாவிடம் கூலிபெறும் வேலைக்காரனாகி விட்டேன். இனி உன்னை எனக்குக் கொடுக்க உன் தகப்பனார் ஒரு போதும் சம்மதிக்க மாட்டார்!" என்று கண்களில் நீர் பெருகக் கூறினான் கந்தசாமி.

இவ்வாறு அவன் கூறியதும் வள்ளிக்குத் துக்கம் தாங்கவில்லை. அவனுடைய கைகளைக் கெட்டியாய்ப் பிடித்துக் கொண்டு, "உங்களை மறப்பதா? அது முடியவே முடியாது!" என்றாள்.

இந்தச் சமயத்தில், "அயோக்கியப் பயலே! வளர்த்த கடா மார்பில் பாய்வது போல் எப்படிப்பட்ட துரோகம் செய்யப் பார்க்கிறாய்? உம்...நட, இந்த நிமிஷமே!" என்று அருணாசலப் பத்தர் உச்சஸ்தாயியில் கத்திக் கொண்டே அங்கே தோன்றியதும், வள்ளியம்மையும் கந்தசாமியும் செயலிழந்து விட்டனர்.

"இல்லை....மா....மா!...." என்று ஆரம்பித்தான் கந்தசாமி.

"பேசாதே! ஓடு வெளியே!" என்று உறுமினார் அருணாசல பத்தர்.

அவ்வளவுதான். கந்தசாமி அதற்குமேல் அங்கே நிற்கவில்லை. அவன் கால்கள் தாமாகவே அங்கிருந்து நகர்ந்தன.

அப்பப்பா! கந்தசாமி வாசலைத் தாண்டும் போது வள்ளியம்மை அவனைப் பார்த்த பார்வை விவரிக்க முடியாத சோக அலைகளை அவனுடைய நெஞ்சில் நிரப்பி விட்டது.

★

இது நடந்து பல வருஷங்கள் ஆகி விட்டன. இப்போது கந்தசாமி தன் இனத்தவரின் உதவியினால் சொந்தமாகவே ஒரு சிறு பட்டறை வைத்துக் கொண்டு வேலை செய்து வந்தான். சொற்ப சம்பாத்தியந் தான். ஆனாலும் சுதந்திரம் பறி போகவில்லை யல்லவா?

அன்று கந்தசாமி பட்டறையில் வேலை செய்து கொண்டிருந்தபோது அவன் மனப் பட்டறையிலும் ஓயாமல் வேலை நடந்து கொண்டிருந்தது. அந்தச் சமாசாரத்தைக் கேட்டதிலிருந்து அவனுக்கு வேலையே ஓடவில்லை. அது அப்படி யொன்றும் புதியதல்ல; அவன் ஏற்கெனவே எதிர்பார்த்தது தான். வள்ளியம்மைக்கு விவாகம்!

கதைகளில் வரும் கதாநாயகர்களைப் போல் — கந்தசாமிக்கும் வள்ளியம்மையின் மேல்தான் முதலில் கோபம் கோபமாக வந்தது. "அவளுக்கு எப்படித்தான் வேறொருவனை மணக்க மனம் இடந்தந்ததோ!" என்று எண்ணி அவன் ஆத்திரமடைந்தான்.

இந்தச் சமயத்தில், "கந்தசாமி, இந்தத் திருமாங்கல்யத்தைச் சீக்கிரம் செய்து முடிக்க வேண்டும். நாளை முகூர்த்தத்தில் மாங்கல்யதாரணம் நடந்து விடும். உன் கையில்தான் இருக்கிறது. கூலியைப் பற்றி யோசிக்காதே; கூடவே தருகிறேன். தயவு செய்து காலை ஏழு மணிக்குத் திருமாங்கல்யத்தை ராமசாமி நாயுடு சத்திரத்தில் கொண்டு வந்து கொடுத்து விடு!" என்று கூறிச் சென்றார் ஓர் அவசரக்கார ஆசாமி.

கந்தசாமி அந்த அவசர வேலையைத் தட்டிக் கழித்திருப்பான். ஆனால் அந்த ஆசாமி அவன் பதிலை எதிர்பாராமலே பவுனைக் கொடுத்துவிட்டுப் போய் விட்டார்,

ஏனெனில், கந்தசாமியிடம் வேலை செய்வதற்கு வேண்டிய உற்சாகமோ பரபரப்போ கொஞ்சங்கூட அப்போது இல்லை. மேலும் திருமாங்கல்யத்தைப் பற்றிய பேச்சை யெடுத்தாலே, அவனுக்கு வள்ளியம்மையும்



நாளும் கழித்த இன்ப நாட்களின் நினைவுகள் வந்து அவன் மனதில் துன்பச் சாயைகளை விரிக்கும்.

"அசடு மாதிரி என்னைச் சுற்றிச் சுற்றி வருகிறாயே, நாளைக்கு என்னை வேறு யாருக்காவது கல்யாணம் செய்து கொடுப்பது என்று பெரியவர்கள் தீர்மானம் செய்து விட்டால், நீ அதைத் தைரியமாக எதிர்த்து நின்று என்னைக் கல்யாணம் செய்து கொள்ளுவாயா?" என்று ஏளனமாகக் கேட்பாள் வள்ளியம்மை.

கந்தசாமி கடகட வென்று சிரித்து விட்டு, "வள்ளி, நான் இருக்கும் போது யார் உன்னைத் தொட்டுத் தாலி கட்டிவிட முடியும்? என் கையினாலேயே செய்த திருமாங்கல்யத்தை உன் கழுத்திலே நான் கட்டுவேன். அந்த நாள் தூரத்திலில்லை!" என்று எத்தனையோ தடவை வள்ளியம்மையிடம் சொல்லியிருக்கிறான்.

இதெல்லாம் அன்று; இன்றோ வழக்கம்போல் இந்தக் கல்யாண சீஸனிலேயும் கந்தசாமி எத்தனையோ திருமாங்கல்யங்களைச் செய்து விட்டான். ஆனால் தன்னையும் வள்ளியம்மையையும் வாழ்க்கைப் பாதையில் பிணைக்கக் கூடிய திருமாங்கல்யத்தை மாத்திரம் அவளுக்கு வாக்குக் கொடுத்தபடி அவன் இதுவரை செய்யமுடியவில்லை!

★

மறுநாள் பொழுது விடிந்ததும் அந்தத் திருமாங்கல்யத்தை எடுத்துக் கொண்டு கல்யாண வீட்டுக்குப் போனான் கந்தசாமி. அங்கே ஒரே ரகளையாயிருந்தது. தான் நேரங் கழித்துப் போனதில் முகூர்த்த வேளை தவறி விட்டதோ, அது காரணமாகத்தான் இந்த ரகளையோ என்று நினைத்து அவன் திடுக்கிட்டான்.

அந்தச் சமயத்தில் அவன் கண்ட இன்னொரு காட்சி அவனை உலுக்கி விட்டது. காரணம், புது மணப் பெண்ணாக நின்றவள் வள்ளியம்மையாக இருந்ததுதான்! அந்த வீட்டு மாப்பிள்ளையாயிருக்க வேண்டிய அவன், திருமாங்கல்யம் செய்து, அதை யெடுத்துக் கொண்டு கூலி கேட்க வந்திருக்கிறானே!

இவ்வாறு எண்ணி அவன் வேதனைப் பட்டுக் கொண்டிருக்கும் போதே மாப்பிள்ளை வீட்டாருக்கும் பெண் வீட்டாருக்கும் இடையே, ஏதோ நகை செய்து போடாததால் ஏற்பட்ட ரகளை அதிகமாகி, கடைசியில் கல்யாணமே நின்று போயிற்று. சம்பந்தி வீட்டார் கோபத்தோடு வெளியேறி விட்டனர்.

அருணாசலப் பத்தருக்கு ஆத்திரமும் அவமானமுமாக இருந்தது. அதே முகூர்த்தத்தில் வள்ளியம்மையை வேறு யாருக்காவது விவாகம் செய்து கொடுத்துவிட வேண்டும் என்று அவர் மனம் துடித்தது. அந்தச் சமயம் கந்தசாமி திருமாங்கல்யமும் கையுமாக அங்கே காட்சியளித்தது எல்லோருக்கும் அதிசயத்தை யளித்தது.

"அப்பா, கந்தசாமி, வா! நீதான் வள்ளியம்மையைக் கல்யாணம் செய்துகொள்ள வேண்டியவன். நான் பணத்துக்கு ஆசைப்பட்டு உன்னை மறந்துவிட்டேன். நீ எப்படிச் சமயத்துக்குத் திருமாங்கல்யத்துடன் வந்து சேர்ந்தாய்?" என்று ஆனந்தத்தினால் நாக் குழறக் கேட்டார் அருணாசலப் பத்தர்.

சம்பந்தி வீட்டிலிருந்து ஒருவர் தன்னிடம் திருமாங்கல்யத்துக்கு ஆர்டர் கொடுத்த சமாசாரத்தைக் கந்தசாமி உற்சாகத்துடன் சொன்னான்.

"எப்படியோ பதினைந்து வருஷங்களுக்கு முன்பு உன் தகப்பனாருக்குக் கொடுத்த வாக்குறுதியை இன்று தெய்வ கதியாக நிறைவேற்றி வைக்கச் சந்தர்ப்பம் நேர்ந்தது!" என்றார் அருணாசலப் பத்தர்.

"நானுந்தான் வள்ளியம்மைக்கு அன்று கொடுத்த வாக்குறுதிப்படி திருமாங்கல்யத்தைச் செய்து எடுத்துக் கொண்டு வந்திருக்கிறேன்!" என்று கந்தசாமி கூறியதும், வள்ளியம்மை நாணித் தலை குனிந்தாள்!

இந்தியாவிலுள்ள மற்ற எல்லோரையும் போல வேயே சீக்கியர்களிடையேயும் தேனீர் அருந்துவ தென்பது நெடுங் காலப் பழக்கம்.

வீட்டிலுள்ளவர்கட்கோ விருந்தினர்களுக்கோ அளிப்பதற் காக வேண்டி புதுமையும் மணமும் நிறைந்ததும் எல்லோரும் மிக விரும்புவதுமான ப்ரூக் பாண்ட் தேயிலை ஒவ்வொரு சீக்கிய கிருஹத்திலும் எப்போதும் காணலாம்.





# ப்ரூக் பாண்ட்

இரு இலையும் ஒரு மொட்டும்

# வான சஞ்சாரம்

இசைத்தேனி

ஏப்ரல் 15ல் திருச்சியில் வேணுகானக் கச்சேரி செய்த டி. என். ஸ்வாமிநாத பிள்ளை அவ்வாத்யத்தில் கைதேர்ந்த வித்வான். கலையுலகின் நன்மதிப்பைப் பெற்றவர். அன்றைய கச்சேரியில் பேகடா, ஸ்ரீரஞ்சனி ராகங்களோடு நவமணிதோடினி என்ற அபூர்வ ராகத்தையும் நல் வடிவமாய்ச் சித்திரித்தது பாராட்டத்தக்கது. பல்லவி ராகமாம் காம்போதியில் அவரது கலைச் சிறப்பு நன்கு விளங்கியது. மிருதங்க வித்வான் சக்திவேல் அவர்களின் வாசிப்பு கச்சிதமாய் அமைந்து கச்சேரியைச் சிறப்பித்தது.

16ல் சென்னையில் கமலா அனந்தகிருஷ்ணனின் கானம் இனிமையாயிருந்தது. ஷண்முகப்ரியா, கேதாரகௌளை ராகங்களையும் உருப்படிகளையும் திறம்படக் கையாண்டார்.

17ல் திருச்சியில் முழு நேரக் கச்சேரி செய்த சிதம்பரம் ஜயராம் பிள்ளை சங்கீத சாரீரம் படைத்தவர். மாயாமாளவகௌளை, சாவேரி, பேகடா ராகங்கள் தவிர பல்லவிக்கு ஹனுமதோடியை எடுத்துக் கொண்டு ஜமாய்த்தார்.

அன்று சென்னையில் வைக்கம் ஸரஸ்வதி ஜீவன் நிறைந்த குரலில் காம்போதி, ஷண்முகப்ரியா, நாட்டக்குறிஞ்சி ராகங்களைப் பாடிக் களைகட்ட வைத்தார்.

18ல் திருச்சியிலிருந்து திருவீழிமிழலை கோவிந்தராஜ பிள்ளை சகோதரர்களின் நாதஸ்வரம் அனாயாச உருட்டல் புரட்டல்களுடன் காதை நிரப்பியது. ஹரிகாம்போதி, பந்துவராளி ராகங்கள் சுகமாயிருந்தன.

கோட்டு வாத்யத்தை நிறம்படக் கையாளுபவர்களில் மன்னார்குடி கே. சாவித்ரி அம்மாளுக்கு ஒரு முக்யஸ்தானமுண்டு. 20ல் திருச்சியில் நடந்த அவரது கச்சேரியில் ராகம் உருப்படிகளை நிதானமாயும் அழுத்தமாயும் கையாண்டார். ஆனந்தபைரவி, பேகடா, மணிரங்கு ராகங்கள் வனப்பாயிருந்தன.

ஏப்ரல் 22ல் முதலான ஒரு வார ரேடியோ நிகழ்ச்சிகளில் அபூர்வ உயர்தரம் கொண்டு திருச்சியில் அமைந்த இரண்டு கச்சேரிகள் ரஸிகர்களின் மனதைக் கவர்ந்திருக்கும். ஒன்று 22ல் கேட்ட முடிகொண்டான் வெங்கடராமய்யரது. அன்று அவரது சாரீரம் வெகு சௌகர்யமாய் வாய்த்தது என்றாலே போதும். கச்சேரியின் சிறப்பைப் பற்றி அதிகம் சொல்ல வேண்டியதில்லை. முதிர்ந்த ஞானம், அபார சாதகம், கற்பனைப் பெருக்குடன் பல உயரிய அனுபவப் பொருத்தங்கள்— இவை யெல்லாம் சேர்ந்து தம் கலையை அபூர்வ ரகமாய் வைத்துக் கொண்டிருக்கும் விசேஷ வித்வான். அவர் வழங்கிய பேகடா, சக்ரவாகம், சாமா ராகங்களும், பாவம் நிறைந்து உருக்கமாய் வெளிவந்த பைரவியும், 'நீரதமு' கிருதியின் நிரவல் ஸ்வரப்ரஸ்தாரங்களும் மேற்கூறிய அவரது கலைச் சிறப்பை நன்கு நிரூபித்தன.

இரண்டாவது கச்சேரி 25ல் நடந்த திருவாவடுதுறை ராஜரத்தினம் பிள்ளையது என்றாலே போதும். அன்று குறிப்பிட்டிருந்த திருவெண்காடு சுப்பிரமணிய பிள்ளைக்குப் பதிலாக நாதஸ்வர கானம் பொழிந்தார். தம்பூரா சுருதியோடு, வயலின், மிருதங்கம் இவைகளையே பக்க வாத்யமாகக் கொண்டது மற்றொரு விசேஷம். பந்துவராளியுடன் எடுத்தவுடனேயே கேட்போரை இன்னிசையில் ஆழ்த்தினார். கல்யாணியை அழகு வடிவமாய்ச் சித்தரித்தார். அடுத்தாற் போல் பல்லவிக்காக மற்றொரு பிரதிமத்யம ராகமாம் பவப்ரியாவை எடுத்தவுடன் அது உசிதமா என்று சற்று சந்தேகித்தேன். ஆனால் சாதாரண வழக்கத்திலிருந்து மேதைகளுக்கு விதிவிலக்குகள் உண்டு என்பதை நிரூபிப்பது போல் அந்த அசாதாரண ராகத்தைத் தெளிவாயும், சங்கோபாங்கமாயும் ஜமாய்த்தார். அதில் விழுந்த வாரப் பிடிகளில்கூட அநாயாசமாய் இழைந்த நாஸாக்களும், எழில் நிறைந்த பிரத்யேக ஜார் கமகப் பிடிகளும் அவரது மேதையை விளக்கின. பல்லவியைத் தொடர்ந்து வாசித்த ராகமாலிகை மாணிக்கக்கோவையாக இலங்கியது.

• • •

23ல் திருச்சியில் இருவர் சேர்ந்து பாடிய நேர் கானம் உற்சாகமாயிருந்தது. ஸிம்மேந்திர மத்யமம், மோஹனம் ராகங்களும் உருப்படிகளில் மாறி மாறி ஸ்வரப்ரஸ்தாரங்களை வழங்கியதும் குறிப்பிடத்தக்கவை. பாடியவர்கள் பி. வி. கணேசய்யர், ராமய்யா.

அன்று சென்னையில் எம். என். செல்வப் பிள்ளை அய்யங்கார் சங்கராபரணத்தை ராகம், தானம், பல்லவிக்காக எடுத்துக் கொண்டு ரஸமாய்ப் பாடினார்.

24ல் சென்னையில் டி. வி. வசந்தா இனிய குரலில் நல்ல தேர்ச்சியுடன் கல்யாணி, ஸஹானா ராகங்களையும் உருப்படிகளையும் திறம்படக் கையாண்டார்.

25ல் சென்னையில் பாடிய ஆர். ரங்கநாயகியின் தன்யாசி, சங்கராபரண ராகங்கள் நன்றாக அமைந்தன.

26ல் சென்னையிலிருந்து கேட்ட எம். கணேசனின் கானம் குறிப்பிடத்தக்கது. தோடி ராகமும், ஸ்ரீவெங்கடேச' கிருதியும் நயமாயிருந்தன.

அன்று அதே நிலையத்தில் பாடிய பிருந்தா, முக்தா இவர்களின் இரு குரல்களில் உருப்படிகள் வெள்ளமாய் வண்ணமாய் இழைந்திலங்கின. ஒன்றேகால் மணி நேரக் கச்சேரியில் கரஹரப்ரியா ராகம் ஒன்றோடு ஆலாபனையை மட்டுப்படுத்தாமல், இன்னும் ஒன்றிரண்டு ராகங்களையும் வழங்கியிருக்கலாம்.

28ல் சென்னையில் நடந்த மாயவரம் பி. சரஸ்வதியின் கானம் சுகமாயிருந்தது. தோடி ராகமும் உருப்படிகளின் ஸ்வரப்ரஸ்தாரங்களும் கவனத்தை இழுத்தன.




குழந்தைகளுக்கு உண்டாகும் வாயு வயிற்றுப் பொருமல், வயிற்று வலி, அஜீரணம், மாந்தம், பல் முளைக்கும் போது ஏற்படும் வயிற்றுப் போக்கு முதலிய சகல வியாதிகளையும் போக்கி நல்ல ஆரோக்கியத்தையும் தரும் சிறந்த நிவாரணம்.

குழந்தைக்கு முக்கியமானது

## பேபிகிரைப்

குழந்தைக்கு ஆரோக்கியமளிப்பது

மிகச் சிறந்த
ரத்த சுத்தி மருந்து

இது தேகத்தில் உஷ்ணம் அதிகரித்து அதனால் ஏற்படும் ரோகங்களை குணப்படுத்தி, தேகத்திற்கு ஆரோக்கியத்தை கொடுக்கும். ரத்தத்தை சுத்தி செய்து ரத்த விருத்தியையும் உண்டாக்கும்




## அயோடிசால்




முகப்பரு, சேத்துப் புண் சொறி, சிரங்கு, வேனல் கட்டி, தீப்பட்ட புண், கரப்பான் முதலியவைகளுக்குக் கைகண்ட
— மருந்து —

## சைபால்

எல்லாக் கடைகளிலும் கிடைக்கும்

தயாரிப்பவர்கள்:
**தி சௌத் இந்தியன் மானுபாக்சரிங் கம்பெனி**
மதுரை

ஏஜண்டுகள்:—ராஜன் டிரக் ஸ்டோர்ஸ், தைனியப்ப நாய்க்கன் தெரு, மதராஸ்-3; சித்ராமா ஜெனரல் ஸ்டோர்ஸ், பெஜவாடா, பெர்ஹாம்பூர் & செகந்தராபாத்; கிரிஜா மெடிகல் ஸ்டோர்ஸ், பெங்களூர் சிடி.

சிலோன் ஏஜண்டுகள்:—M. O. A. கனி & கோ., 96, சதாம்ஸ் ரோடு, கோட்டை, கொழும்பு



## லோத்ரா

கர்ப்பாசய ரோக நிவாரணி

லோத்ரா பல்லாண்டுகளாக இந்திய ஸ்திரீகளுக்கு விசுவாசத்துடன் சேவை புரிந்து நம்பிக்கையுள்ள கர்ப்பாசய ரோக நிவாரணி என்று புகழையும் ஸ்தாபித்துக் கொண்டுள்ளது.

லோத்ரா கவர்ச்சி மிக்க ஆரோக்கியத்தையும் சக்தியையும் அளிக்கிறது.

EASTERNS 573.

## கேஸரி குடீரம் லிமிடெட்
**மதராஸ்**

ஒரிஸ்ஸா, நிஜாம் ஸமஸ்தானம், ஆந்திர ஜில்லாக்கள், தமிழ் நாடு, முதலிய இடங்களுக்கு ஏஜண்டுகள்:

சித்ராமா ஜெனரல் ஸ்டோர்ஸ்
பெர்ஹாம்பூர் - செகந்திராபாத்
பெஜவாடா - மதுரை

Edited, Printed and Published by R. Krishnamurthy at the "Kalki" Press
116-119, Sladens Garden, Poonamalle High Road, Kilpauk, Madras.

